உ

ஸ்ரீ சற்குருவே நமா.

விருத்தாசலத்தில் ஸ்ரீ பெரியநாயகியார்
வரப்பிரசாதியாய் எழுந்தருளியிருந்த
ஸ்ரீகுமாரதேவர் திருவாய்மலர்ந்தருளிய
சாத்திரக்கோவையுள்

# அத்துவிதவுண்மை.

## விஞ்ஞானசாரம்.

சுத்தசாதகம்.

ஆகியவிவற்றின் மூலமும்,
இவற்றைத் தொந்தத்தசியென்னும்
உபதேசமுறைமைப்படி யமைத்து
திருத்துருத்திஇந்திரபீடம் கரபாத்திரசுவாமிகள்
ஆதீனத்திற்குரிய பிறைசை
அருணாசலசுவாமிகள் சிஷ்யராகிய

பாரிப்பாக்கம்,
## முனியப்பசுவாமிகள்
செய்தவுரையும்,
சேலஞ்ஜில்லா செவ்வாய்பேட்டையில்
ஷ-குருபரம்பரையைப் பரிபாலித்துவரும்
சிவில்கோர்ட்டுவக்கீல்-ம-௱-௱-ஸ்ரீ-ஸ்ரீமான்
அப்பாசாமிபிள்ளையவர்களால்

காஞ்சீபுரம்.
திருவேங்கடமுதலியாரது
இயற்றமிழ்விளக்க அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன.

1885ஸு.





சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

## நிலைமண்டிலவாசிரியப்பா.

சீர்தருமுலகிற் றிகழுறுமானிடப்
பேர்தருமருமைப் பெறலருந்தவத்தின்
யாக்கைதங்கட் கெய்திடப்பன்னாள்
மாக்கள்பவவா மம்மர்கடந்தே
தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி
யுய்வகைநாட வுன்னுநர்தமக்கிங்
குண்மைநிலையை யுணர்த்துதலில்லாப்
பண்பமரலகில் படிற்றுநூல்போலா
தெட்டுணையேனு மிங்கக்கென்னுஞ்
சுட்டுக்கடங்காச் சுயம்பிரகாசச்
சச்சிதானந்தத் தனிப்பொருடன்னை
நிச்சயமங்கை நெல்லிக்கனிபோற்
றெளிவுறக்காட்டிச் சேதனர்தம்மை
யளியுடன்முத்தி யதனிடைசேர்ப்பான்
மகுடமன்னவர் மாணடிவணங்கத்
தகுதியாற்புவியிற் றனிக்கோலோச்சி
யரசுசெய்யு மரும்பெருஞ்செல்வத்
துரிசறுவாழ்வைத் துரும்பென வெறுத்துத்
துறவதுபூண்டு சுத்தமெய்ஞ்ஞான
நிறைவுறும்பேருநர் நின்மலாரியராஞ்
சாந்தலிங்க சுவாமிகடம்பா
லாய்ந்தமெய்ப்பொரு ளளித்திடப்பெற்றும்
அணியார்பழமலை யம்பதியதனின்
மணிமுத்தாநதி வன்கரைமாட்டே
விண்டொடுமால விருக்கத்தின்மேற்
பண்டையசாபப் படுபழிதன்னாற்
றன்னுருமாறிய சடாமுனிக்கங்கன்
றுன்னுறுசாபந் தொலைவுறவியற்றியும்
கானகந்தன்னிற் கானடைவருத்தந்
தானகம்பொருது சமமுயர்விஞ்சிய

விருத்தசைல விமலனேதண்ணீர்த்
திருத்தகுபந்தர் திருந்தவைத்துதவத்
தாகந்தவிர்ந்து தனிவடநீழலிற்
சோகமாயின்பத் துயிலுறுங்காலைப்
பெரியநாயகியார் பிடுறுந்தமது
திருமுடிமஞ்சனஞ் செய்தற்குரியதாம்
பைம்பொற்பாத்திரப் பாலைக்கொணர்ந்து
தம்பெருமடியிற் றண்மலர்முடியை
யுரிமையினிருத்தி யுற்றவவ்வமுதை
யருளொடும்புகட்ட வருந்திக்களித்தும்
வேறுபல்லற்புதம் விளங்குறவிருந்த
கூறுணுப்புகழ்சேர் குமாரதேவர்
விருத்தாம்பிகையெனும் விமலையார் தூய்மை
தரித்ததன்வாக்கிற் சார்ந்திருந்தருளத்
திருவாய்மலர்ந்த தெருளுபர்ஞானந்
தருசீர்சோடச சாத்திரமவற்றுள்
உத்தமசாமத் துச்சிவாக்கியமாந்
தத்துவமசியின் சாரப்பொருள்சேர்
அத்துவிதவுண்மை விஞ்ஞானசாரத்தொடு
சுத்தசாதகமெனச் சொல்மூன்றுநூலும்
கற்றவர்க்கன்றிக் கல்லாதவர்க்குத்
தெற்றெனவிளங்குந் திறத்தவன்றாகலின்
பொழிப்புரையாகப் புகன்றருளென்னுச்
செழிப்புறுபல்வளச் சேலஞ்ஜில்லா
சிவில்கோர்ட்டுவக்கீ லெனுந்திருவாளன்
நவையறுமங்கல நகரிடைவாழ்வோன்
சுரநதிகுலத்தினன் சுப்பராயவேள்
வரமகலையென வந்தவதரித்தோன்
கண்டிகைபூதி கலனெனக்கொண்டோன்
தொண்டனைச்சிவமாத் துகளறமதிப்போன்
பசுபதிக்குரிய பலதிருப்பணிகள்
வசுமதிமீது வழுவறச்செய்வோன்
கோவில்சத்திரங் குறைவறக்கட்டுவித்
தோவில்பெரும்புக ழுலகிற்படைத்தோன்
சத்திநிபாதத் தகைமைசிறந்திடு
முத்தமகோட்டி யுடையவிநோதன்
பூசனையில்லாப் போனகங்கனவிலு
நேசமுற்றருந்த நினையாப்புனிதன்
குவளைத்தாரினன் கொடையினிற்கன்னன்
தவமனஞானச் சனகனிற்பெரியோன்
இன்னணம்பல்சீ ரியைவுறப்பெற்ற
தன்னிகரப்பா சாமியால்புகலச்

சொற்பொருடேருஞ் சுவைதருவித்யா
விற்பனர்குழாத்தின் மேவிவாழண்ணல்
திசாமுகமெங்கணுஞ் சீர்த்தவேதாந்த
விசாரணைமுதிர்ந்த மேதகுபுந்தியோன்
பொறையுமெய்ம்மையும் புரையறுகல்வி
நிறைவுஞ்சமைந்த நிருமலக்குணத்தோன்
திருத்துருத்தியிற்றிகழிந்திரபீடத்
தருத்தியினென்று மமர்கரபாத்திர
தேசிகற்பரவுந் தெத்தாத்திரேய
மாசிலாக்குருபதம் வழுத்துசெங்கமல
பாதனையல்பகல் பரவுமுளத்தொடு
நீதிசேர்நாகை நெடும்பதிமேவிய
அருணாசலகுரு வருள்பெறும்பிறைசை
அருணாசலப்பெய ராரியற்பரவி
ஞானநூன்முழுது நவையறத்தெரிந்து
மோனசுகக்கடன் மூழ்கியநல்லோன்
இல்லறத்திருந்து மிந்தியவழியிற்
செல்லுமனத்தைச் சிவத்திறசெலுத்திக்
கமலபத்திரநீர்க் கவினவமர்ந்து
முயலச்சார்புமுழுதுங்களைந்தோன்
பைம்பொழில்சூழும் பாரிப்பாகையான்
நம்புமெய்யடியார் நலம்பெறவுணர்த்துவோன்
நதிகுலநாயக னல்லண்ணபூபதி
முதிர்தவந்தனில்வரு முற்றுணர்வாளன்
நனையவிழ்கழுநீர் நறுந்தொடைமார்பன்
முனியப்பநாம முதல்வனெங்கோமான்
சொன்னயம்பொருணயந் தொகுபொழிப்புரைசெய்
திந்நிலத்தெவர்க்கு மெளிதினல்கினனே.

இஃது இவ்வுரையாசிரியர் மாணாக்கருளொருவராகிய
குன்றத்தூர் மாணிக்கமுதலியாரியற்றியது.

---

## விளம்பரம்.



உ

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# அத்துவிதவுண்மை.

மூலமும் - உரையும்.

## ஆழத்துப்பிள்ளையார் துதி.

பொங்கரவதுவுமிந்தும் புரிசடையதனிற்சேர்த்தி
அங்கரந்தனிலிடத்தி லழகியமானையேந்தும்
சங்கரன்சேயெம்பாசந் தகர்த்தைந்துமொருங்கறுக்க
ஐங்கரங்கொண்டவாழத் தையனைவணக்கஞ்செய்வாம்.

இதன்பொருள்.=சீறுகின்றசர்ப்பத்தையும் இளம்பிறையையுங்கட்டப்பட்ட சடையினிடத்தில் வைத்து அழகியகையில் மானையும் இடப்பாகத்தில் அழகுபொருந்திய உமையவளையும் தாங்குகின்ற பரமசிவனது திருக்குமாரராகி எம்முடைய பந்தபாசங்களைக் கெடுத்துப் பஞ்சமலங்களையும் வேரோடு களைய ஐந்துகரத்தோ டெழுந்தருளியிருக்கின்ற பாதாளவிநாயகனை வணங்குவாம்.=என்றவாறு. பஞ்சமலங்களாவன-ஆணவம்-மாயை-கன்மம் - திரோதை - மாமாயை-என்பனவாம்.

## பெரியநாயகியார் துதி.

ஆண்டகுருவே கண்மணியே யருளே நீ நானென்றாகப்
பூண்டவடிவை யென்னுடைய புந்தியதனு ணின்றுணர்த்தி
ஈண்டப்படியே யென்னாவி லிருந்து முரைக்கவேண்டு நீ
நீண்டமாலுமயன் போற்று நிமலவிருத்த நாயகியே.

(இ-ள்.)=நெடுமாலும் பிரமாவும் துதிக்கின்ற களங்கரகிதமாகிய விருத்தாம்பிகையே என்னை ஆட்கொண்ட குருமூர்த்தமே விழிமணியே திருவருட்சத்தியே லோகமாதாவாகிய தேவரீர் நீயென்னும்பிரமமும் நானென்னுங்கூடஸ்தனும் அத்துவிதமாக அனுபவித்த அபிக்கியானுசந்தானத்தை அடியேனது அறிவினுள் இருந்து அறிவித்தருளிப் புறத்திலும் அதுபோலவே என்வாக்கில்நின்றும் இந்நூற்கூறியருளவேண்டும்.=எ-று.

## நூல்.

மேலாஞ்சதுட்டசாதனங்கண் மேவிநிறைந்தபேர்க்குரைக்கின்
மேலாமதுநாமெனத்திடமாய் விளங்குமவையில்லாதவர்க்கு
மேலாம்பரமன்மான்மழுவாய் விளங்கியுரைத்தும்விளங்காது
மேலாஞ்சாதனங்கள்வர மேவவேண்டுஞ்சாதுசங்கம்.

(இ-ள்.)=உயர்வாகிய சாதனசதுஷ்டயம் பொருந்திப் பூரணமான பக்குவர்களுக்கு எவைக்குமேலாகிய பிரமமேகூடஸ்தனென்று உபதேசித்தமாத்திரத்தில்உறுதியாய்ப்பிரகாசிக்கும் அச்சாதனங்களின்றிய அபக்குவர்களுக்குச் சிரேஷ்டமாகிய சிவன் மான்மழு முதலியவற்றோடு பிரத்தியக்ஷமாய்வந்து உபதேசித்தபோதிலும் பிரகாசியாது, மேன்மையாகிய நான்குசாதனங்களும் உண்டாகச்சற்சங்கத்தோடு பழகவேண்டும்,=எ-று. (க)

உண்டாய்த்தோன்றிரமித்திடுத லொருநம்வடிவேயுருநாமம்
கண்டேயிடன்மாத்திரமல்லாற் கருதிப்பார்க்கின்வேறில்லை
பண்டேமுதலித்தகைவாகும் பலவாய்க்காணன்மைத்திரிவால்
விண்டாற்றிரிவையேகமாய் விளங்குநமதுவடிவமே.

(இ-ள்.)=ஒப்பற்ற நமது சச்சிதானந்தஸ்வரூபமே இருந்துவிளங்கி ஆனந்திப்பது.நாமரூபமோவெனின் தோற்றமாத்திரமே யல்லாமல் நினைத்துப்பார்க்குமிடத்தில் வேறேயில்லை அநாதிகாலமே இந்தச்சுவானுபூதியாகும் (இங்ஙனமிருக்க) நானாவாகத்தோற்றுவது அஞ்ஞானவிபரீதத்தினாலாம் அவ்விபரீதத்தைவிட்டால் நமது சொரூபமே அத்துவிதமாய்ப் பிரகாசிக்கும்,=எ-று. (உ)

எந்தச்சத்திலசத்தாகு மிந்தவுலகுசத்தாகும்
எந்தச்சித்திலசித்தாகு மிந்தவுலகந்தான்விளங்கும்
எந்தவின்பிற்றுன்பாகு மிந்தவுலகமின்பாகும்
அந்தச்சச்சிதானந்த மதுவேநமதுவடிவாகும்.

(இ-ள்.)=இந்தவுலகம் எந்தச்சத்தினிடத்தில் அநிர்தமாகுமோ அதுவே சற்சொரூபமாம் இவ்வுலகம் எந்தச்சித்தினிடத்தில் சடமாகுமோ அதுவே சிற்சொரூபமாம் இவ்வுலகம் எந்தஆனந்தத்தில் துக்கமாகுமோ அதுவேயானந்தசொரூபமாம் அங்ஙனமான அஸ்திபாதிப்பிரியமே நமது சொச் சொரூபமாம்,=எ-று. (ங)

எல்லாநாமேயெனவறிந்தா லெஃதைநினைவானினைத்திடுதல்
சொல்லாலெஃதையுரைத்திடுத றொழிலாலெஃதைச்செய்திடுதல்
நில்லாவுலகைவேறெனவே நினைத்தலுரைத்தறொழில்புரிதல்
நல்லாரனைத்துநாமெனவே நாடாரவையினென்றையுமே,

(இ-ள்,)=சர்வமுநாமேயென்றுசுவானுபவமாகத்தெரிந்தால்எதைநினைவினால்நினைப்பது வார்த்தையால் எதை வசனிப்பது கிரியையால் எதைச்செய்வது (ஆதலால்) அசத்தாகிய பிரபஞ்சத்தை அன்னியமென்று நினைவதும் வசனிப்பதும் தொழில்செய்வதுமாகிய அக்கிரியைகளினொன்றையாவது சத்துக்கள் சர்வமுநாமேயென்று துவிதமாகக்குறியார்கள்,=எ-று. (௪)

நானாவாக்த்தோன்றியிடு நாமரூபமிவையனைத்தும்
நானல்லவொருநாமே நாடிமகிழுஞ்சித்திரங்கள்
தானுஞ்சித்தாகாசத்திற் றன்னைத்தானேதான்றானே
தானுங்கருவியினில்வரைந்து தானேநோக்கிமகிழ்ந்திடுதல்,

(இ-ள்,)=பலவாகக் காணப்படுகின்ற நாமரூபங்களாகிய விவையெல்லாம்பலவல்ல, ஒப்பற்றநமது சொரூபமே. கண்டுகளிக்கின்ற விசித்திரங்களியாதெனின் தற்சொரூபமாகிய ஞானாகாயத்தில் தற்சொரூபவிலாசத்தையே தனக்குத்தானே தன்மயமாகிய கருவிப் பொருளில்எழுதி தான்தானே பார்த்து ஆனந்தித்தலாம்,=எ-று. (௫)

தங்கந்தானேபணிதியாய்ச் சாற்றும்விதமாய்விளங்குதலின்
அங்கமுதலாஞ்சகங்களா யறிவேவிளங்குமபலில்லை
இங்கங்கென்றேபங்கொன்று மில்லையகண்டவறிவொன்றே
துங்கவறிவுதோன்றளவுந் தோன்றுநானாவிதரூபம்,

(இ-ள்,)=பொன்னொன்றே ஆபரணங்களாகிச் சொல்லுகின்ற பலநாமங்களையுடைத்தாகிப் பிரகாசிப்பதுபோல ஆத்மசொரூபமே சரீரமுதலாகிய பிரபஞ்சங்களாய்ப் பிரகாசிக்கும்,வேறில்லை. இவ்விடமவ்விடமென்று ஒருபிரிவுமில்லை அகண்டாகாரஞானம் ஒன்றேயாகும் அப்பரிபூரண ஞானமானது வியாபிக்குமட்டும் பலவகைப்பட்ட கிரிசியங்கள் பிரகாசிக்கும்,=எ-று. (௬)

இன்னானன்னானிதுவதுவென் றியம்புமுலகம்வேறன்று
தன்னானந்தலீலையினாற் றன்னைத்தானேதன்னிடத்தில்
அன்னானின்னானதுவிதுவென் றனந்தவிதமாய்த்தான்பகுத்தே
உன்னாநின்றுதானடிக்கு மொருகூத்தெனவேயியம்புவரால்,

(இ-ள்,)=இவ்விதப்பட்டவன் அவ்விதப்பட்டவன் இந்தவஸ்து அந்தவஸ்துவென்று சொல்லுகின்ற பிரபஞ்சமானது அன்னியமல்ல.தனதுசுகானந்த லீலாவிபூதியினால் தனது சொச் சொரூபத்தைத் தான்

தானே தனது சந்நிதானத்தில் அவ்விதப் பட்டவன் இவ்விதப்பட்டவன் அந்தப்பொருளிந்தப்பொருளென்று நானாவகையாய்த்தானே விரித்துச் சங்கற்பித்துநின்று தான்செயகின்ற ஓர்நடிப்பென்று சத்துக்கள்சொல்லுவார்கள். ஆல்-அசை.=எ-று. (எ)

தங்கமொன்றேபணிதிகளிற் சாற்றும்விதங்கள்வெவ்வேறு
தங்கவிலக்கணமுமன்று தங்கம்விட்வும்வேறன்று
தங்கமழியாப்பணியழியிற் சாற்றுமிந்தத்தகைமைபோல்
எங்குநிறைசித்தாநம்மி லிலகுமிந்தவுலகமே.

(இ-ள்,)=பொன்னொன்றே ஆபரணங்களில் சொல்லும் பெயர்கள் வேறுவேறாகும் (அங்ஙனங்கூறுதல்) சுவர்ணலட்சணமுமல்ல. ஆயின்) சுவர்ணத்தையல்லாமலும் வேறல்ல. ஆபரணமென்ப தழிந்தாலும் சுவர்ணங்கெடாது, சொல்லுகின்ற இத்தன்மையைப்போல எந்தவிடத்திலும் நிறைந்துள்ள அறிவுசொரூபமாகிய நம்மிடத்தில் இவ்வுலகமானது பிரகாசிக்கும்,=எ-று. (அ)

தானுண்டாகிலுலகுண்டாந் தானுண்டாகிலுயிருண்டாம்
தானுண்டாகிற்பரமுண்டாந் தானுண்டாகில்வீடுண்டாம்
தானுண்டாகிற்பஞ்சதொழிற் றானுண்டாகுந்தனையன்றித்
தானுண்டோமற்றவையதனாற் றானேயனைத்தும்வேறில்லை.

(இ-ள்,)=தானுண்டானால் உலகமுண்டாகும் தானுண்டானால்சீவனுண்டாகும் தானுண்டானால் ஈசுரனுண்டாகும் தானுண்டானால் மோட்சமுண்டாகும் தானுண்டானால் பஞ்சகிருத்தியங்கள் தானேயுண்டாகும். தன்னையல்லாமல் வேறுபொருள்கள்தானேயுள்ளதோ,அவ்வனுபவத்தினால் சர்வமும் தனதுசொரூபமேவேறேயில்லை,=எ-று பஞ்சகிர்த்தியங்களாவன சிருஷ்டி-ஸ்திதி-சங்காரம்-திரோபாவம்- அனுக்கிரகம்-என்பனவாம். (கூ)

மந்தவிருளிற்கயிறரவின் மாறுபாடாய்த்தோன்றுதல்போல்
இந்தவுலகுமுயிர்களுமவ் வீசன்றானுமுயிரடையும்
பந்தம்வீடுமீசன்செய் பஞ்சகிருத்தியங்களுமே
அந்தநமதுசொரூபத்தி லாரோபிதமாய்நின்றிலகும்.

(இ-ள்,)=மக்கினமான அந்தகாரத்தில்கயிறானது சர்ப்பத்தைப்போலவேறுபாடாகித்தோற்றுந்தன்மைபோல்இந்தச்சகத்தும்சீவர்களும் அந்தஈசுரனும் சீவர்களடைகின்ற பந்தமும்முத்தியும் ஈசுரனாற்செயப்பட்ட ஐந்தொழில்களும்அழகியநமதாத்மசொரூபத்தில் அத்தியாசமாய்ப் பிரகாசிக்கும்.=எ-று, (௧0)

அலங்கவிதமாய்க்கீற்றையுடைத் தாகுஞ்சிலையொன்றதைப்பார்க்கில்
அனந்தவிதமாய்த்தோன்றியிடு மந்தக்கீற்றுஞ்சிலையொன்றே
அனந்தமுடையநம்மிடத்தி லகிலமந்தத்தகைமைபோல்
அனந்தவிதமாய்த்தோன்றியிடு மறிவேயன்றிவேறில்லை.

(இ-ள்,)=அளவில்லாதவகையாய் இரேகையை உடையதாகியவொரு சிலையுண்டு அதைப்பார்க்குமிடத்தில் அளவில்லாவகையாய்க்காணப் படும். அவ்விரேகையுஞ்சிலையும் ஒன்றேயாம்.அழிவின்மையையுடைய நமதுசொரூபத்தில் பிரபஞ்சமானது அத்தன்மைபோலஅளவில்லா வகையாய்க்காணப்படும். (அங்ஙனந்தோற்றினும்) அறிவுசொரூபமே யன்றி வேறேயில்லை.=எ-று. (கக)

மையேமிகுநித்திரைமோக மயக்கிற் கனவைக்கனவதனில்
பொய்யேயெனத்தோன்றாதவர்க்கே புகலவேண்டுநனவுணர்ந்தோர்
மெய்யேபோலத்தோன்றிநனி விளங்குஞ்சகஞ்சற்குருவன்றிப்
பொய்யேயெனத்திட்டமதாகப் பொருந்தத்தோன்றாதொருக்காலும்

(இ-ள்.)=இருள்மிகுந்த நித்திராமோகமயக்கத்தினால்வருகின்றசொப்பனத்தைஅச்சொப்பனாவஸ்தையில்மித்தையேயென்று கண்டறியாதவர்களுக்குச்சாக்கிரத்தை யறிந்தவர்கள் சொல்ல வேண்டும் அது போல்சத்தியமாகத்தோற்றி நன்றாகப்பிரகாசிக்கின்ற உலகமானது சற்குருவினாலல்லாமல் மித்தையேயென்று உறுதியாகப் பொருந்தும்படி ஒருக்காலமுந் தோற்றமாட்டாது.=எ-று. (கஉ)

கனவினனவேயுணர்ந்துயர்ந்தோர்கனவென்றொருவற்குரைத்திடினு(ம்
கனவிதெனவேகாணாது காணுந்தனக்கென்றறிவுதிக்கின்
வினவிலதுபோனனவையுந்தம் விகற்பமெனவேயுரைத்திடினும்
நினைவினிசமாய்க்கொள்ளாது நிசமாந்தனக்கென்றறிவுதிக்கில்,

(இ-ள்.)=சொப்பனத்தில் சாக்கிரத்தையறிந்து மேலானவர்கள்சொப்பனமென்று ஒருவனுக்குச்சொன்ன போதிலும் இது சொப்பனமென்று காணமாட்டான். அவனுக்கே அறிவுதயமானால் காண்பன். கேட்குமிடத்தில்அத்திருஷ்டாந்தம்போல சாக்கிரத்தையும் தனதுமனோவிகற்பமென்று சொன்னபோதிலும் புத்தியில் உண்மையாய்ப் பிரகாசியாது தனக்கேஞானானுபவமுதயமானால் உண்மையாகப்பிரகாசிக்கும்,=எ-று, (கங)

கனவைக்கனவென்றுணர்ந்தவனைக் கனவினீயாரெனவொருவன்
வினவிலவனுநனவதனில் விளங்குந்தனையேயுரைப்பனதின்

நனவைக்கனவென்றுணர்ந்தவனை நனவினீயாரெனவொருவன்
வினவிலவனுமகண்டமாய் விளங்கும்பிரமமேயென்பன்.

(இ-ள்,)=சொப்பனத்தைச்சொப்பனமென்று அறிந்தவொருவனைச் சொப்பனத்தில் நீயாவனென்று ஒருபுருடன் கேட்குமிடத்தில் அப்புருடனும் சாக்கிராவஸ்தையில்பிரகாசிக்கின்ற தன்னையே சொல்லுவன், அத்திருஷ்டாந்தம்போல் சாக்கிரத்தை மனோசங்கற்ப மென்று அறிந்தஞானியைச்சாக்கிரத்தில் நீயாவனென்று ஒருபுமான் கேட்குமிடத்தில் அந்தஞானியும் பரிபூரணமாய்ச் சதோதயமாகப்பிரகாசிக்கின்ற ஆத்மாவேஎன்றுசொல்லுவன்.=எ-று. (௧௪)

நனவிற்றானோரிடத்திருக்க நவினித்திரையின்மோகத்தால்
கனவிற்றேசாந்தரமுதலாய்க் காணுமனேகவிதமஃதின்
வினவினுமுமகண்டமாய் விளங்கியசையாதிருந்திடவே
கனவிம்மாயைதனில்விதமாய்க் காணுந்தேசாந்தரமுதலாய்,

(இ-ள்,)=சாக்கிரத்தில் ஒருவன் ஒருஸ்தானத்திலிருக்கச்,சொல்லுகின்றநித்திராமயக்கத்தினால் சொப்பனத்தில் தேசமாதியாக நானாவகையுந்தோன்றும் அத்திருஷ்டாந்தம்போல,கேட்குமிடத்தில் யாமும் பரிபூரணமாய்ப்பிரகாசித்துச்சலனமின்றி இருக்க,மகத்தாகிய இந்தமாயாமோகத்தினால் தேசநாடுகளாகிய நானாவிதமாய் ஆரோபிக்கும்,=எ-று. (௧௫)

கனவிற்றோன்றும்பொருளெல்லாங் கனவிற்கனவென்றுணர்ந்தக்கால்
நனவின்விவகாரந்தோன்று நவிற்றுமிந்தத்தகைமைபோல்
நனவிற்றோன்றுஞ்சகமனைத்து நமதுசங்கற்பமதெனவே
நனவிற்றோன்றியிடுங்காலை நமதுசொரூபந்தோன்றியிடும்,

(இ-ள்,)=சொப்பனத்தில் திரிசியமாகின்ற சகலவஸ்துக்களும்சொப்பனத்திலேயே சொப்பனமென்று அறிந்தவிடத்தில் சாக்கிரத்தின் விவகாரமானதுகாணப்படும்.சொல்லுகின்றஇத்திருஷ்டாந்தம்போல சாக்கிரத்தில்காணப்படுகிற சகலபிரபஞ்சங்களும் நம்முடைய சங்கற்பமென்று அச்சாக்கிரத்தில்தானேகாணப்படுமிடத்தில்நமதறிவுசொரூபங்காணப்படும்,=எ-று, (௧௬)

மனத்திற்கனவிற்கனவெனவே மதிக்கினந்தவிவகாரத்
தனத்தமுறினுங்கலக்கமுறா னதிகமுறினுமகிழ்ச்சியுறான்
மனத்தினனவில்விவகார மயங்கிநீங்காதிருப்பனதின்
கனத்தசகஞ்சங்கற்பமெனக் கண்டாற்றனைநீங்காதிருப்பார்,

(இ-ள்,)=சொப்பனத்தில் சொப்பனமேயென்று மனதில் அறிந்தால் அவ்விவகாரத்தில் அழிவுவந்தாலும் துன்பப்படான் விருத்தியானாலும் சந்தோஷப்படான் மனதில் சாக்கிரவிவகாரத்தினால் சொப்பனவிவகாரத்தில் மயங்கிப் போகாமல் சுகமாயிருப்பன் அத்திருஷ்டாந்தம்போல பெரிதானஉலகம் சங்கற்பமாத்திரமேயென்று பார்த்தால் தற்சொரூபத்தைவிடாமல் சத்தாசாமானியமாத்திரமாய்ப் பிரகாசிப்பார்கள்.=எ-று. (கஎ)

சிங்காதனத்தில்வீற்றிருக்குஞ் சிறப்பாரரசுங்கனவடைந்து
மங்காப்புலைத்தன்மையையமேவி வருந்துவோன்றன்னனவுணரின்
அங்காஞ்சோகமோகமெலா மந்தக்கணமேநீங்குமதின்
இங்காஞ்சீவத்துவமோக மிரியுந்தனைத்தேர்ந்தக்கணமே.

(இ-ள்,)=சிம்மாசனத்தில் எழுந்தருளியிருக்கும் சிறப்புப்பொருந்திய அரசனும் சொப்பன மடைந்து குலறந்த நீசத் தன்மையைப் பொருந்தி வருந்துமவ்வரசன் தனதுசாக்கிரத்தைஅறிந்தால் அச்சொப்பனத்தில் உண்டாகிய சோக மோகங்களெல்லாம் அப்பொழுதே போகும் அத்திருஷ்டாந்தம்போல இத்தேகாதிபிரபஞ்சத்தில் உண்டாகிய சிதாபாசத்வமோகமானது தனது நிஜசொரூபத்தையறிந்தமாத்திரத்தில் நாசமாம்,=எ-று. (கஅ)

கனவைக்கனவென்றுணர்ந்தந்தக் கனவினனைநோக்கிடினக்
கனவையொழிந்தவக்கணமே காணுநனவில்விழிக்குமதின்
நனவைச்சங்கற்பமென்றுணர்ந்து நனவிற்றனையேநோக்கிடின்
நனவையொழிந்திட்டக்கணமே நமதுசொரூபத்தேவிழிக்கும்.

(இ-ள்,)=சொப்பனத்தைச் சொப்பனமென்று அறிந்து அச்சொப்பனவஸ்தையில் சாக்கிரத்தைப் பார்த்தால் அச்சொப்பனத்தை நீங்கிய அந்தட்சணமே காணப்படுகின்ற சாக்கிரத்தில்விழிப்பன் அத்திருஷ்டாந்தம்போல, சாக்கிரத்தை மனதினேவென்றுஅறிந்து சாக்கிரத்தில் தனதாத்மசொரூபத்தையே பார்த்தால் தேகாதி பிரபஞ்சவாசனையமாகிய சாக்கிராவஸ்தைநீங்கி நமது அறிவானந்த சொரூபத்தில் அப்பொழுதேவிழிப்பன்;=எ-று. (கக)

கனவையொழிந்துநனவதனைக் கண்டார்நனவினின்றுபினைக்
கனவைநோக்கியிடின்முன்னங் கண்டபடியேதோன்றுமதின்
நனவையொழிந்துதன்சொரூப நன்றாயுணர்ந்தோர்தநின்று
நனவைநோக்கினேவுகொடு நாடின்முனம்போற்றோன்றியிடும்.

(இ-ள்,)=சொப்பனநீங்கிச்சாக்கிரந்தைக்கண்டவர்கள் சாக்கிரத்திருந்துபின்பு அச்சொப்பனத்தைப் பார்க்குமிடத்து முன் பார்த்தது

போலவே காணும் அத்திருஷ்டாந்தம்போல, சாக்கிரநீங்கித் தனதாத்ம சொரூபத்தை ஐயந்திரிபின்றி அறிந்தவர்கள் அவ்வறிவானந்த சொரூபத்தினின்று சாக்கிரத்தைக்கண்டு மனோவாசனையைக்கொண்டுபார்க்குமிடத்து முன்போலவே காணப்படும்.=எ-று. (உ0)

உறக்கமோகமதிற்கனவி லுலகமுயிர்கள்விவகாரம்
சிறக்குமெய்போற்றோன்றியதைத் தேரிற்பொய்யாய்விடுமஃதின்
மறக்குமாயாமோகமதின் மாசார்பந்தம்விடதெனப்
பிறக்குமவைகடமைத்தேரிற் பேசும்பொய்யாய்ப்போய்விடுமால்.

(இ-ள்.)=நித்திராமோகத்தினு லுண்டாகிற சொப்பனத்தில் உலகமும் சீவவிவகாரங்களும் மேலாகிய யதார்த்தம்போலக்காணப்பட்டு அதனிஜசொரூபத்தை விசாரிக்குமிடத்து மித்தையாகிப்போம் அத்திருஷ்டாந்தம்போல மறைப்பையுடைய மாயாமோகவிலாசத்தினுல் குற்றம்பொருந்திய பெத்தமுத்தியென்று உண்டாகும்அப்பெத்தமுத்திகளை விசாரிக்கு மிடத்தில் சொல்லுகின்ற மித்தையாய்ப் போகும்.=எ-று. (உக)

ஒருவனுளதாகையிற்கனவு முண்டாமுறக்கமோகமதின்
ஒருவனிலதாகையிற்கனவு மொருகாலையினுமிலதாகும்
சொரூபநமதுண்டாகையினுற் றோன்றுநானுவிதசகநம்
சொரூபமிலதேலில்லையதனுற் றோன்றுமனைத்துஞ்சொரூபமே.

(இ-ள்.)=ஒருபுருடன்உண்டாயிருக்கில் நித்திராமோகத்தில் சொப்பனமும்உளதாம் ஒருபுருடன் இன்றாயிருக்கில் சொப்பனமும்ஒருகாலத்திலும் இல்லாததாம் நமதுசொரூபம் உண்டாயிருக்கையினுல் பலவிதசகங்கள் உண்டாகும் நமதறிவானந்த சொரூபம் இல்லாவிட்டால் இல்லையாகும் அவ்வனுபவத்தினுல் காணப்படுகின்ற சகலமும் நமதுசொரூபமேயாம்.=எ-று. (உஉ)

படிகத்தடுத்தநிறங்களதிற் பத்திபாயுமந்நிறமாய்ப்
படிகமாகிநீங்கியிடும் பகருமித்தத்தகைமைபோல்
முடிவினமதுசோரூபத்தின் மோகஞ்செயுமாயையிற்றோன்றும்
முடிவில்பந்தம்வீடதுமில் மொழியுமாயையென்பதுமில்.

(இ-ள்.)=ஸ்படிகத்தில் அனுசரித்த வன்னங்கள்அப்படிகத்தில்பிரதிபலிக்கும். அவ்வவ்வண்ணமாகியும் சுயம்படிகமாகியே அவ்வன்னங்கட்கெல்லாம் அதிஷ்டானமாய் நீங்கிநிற்கும். சொல்லுகின்றஇத்திருஷ்டாந்தம்போல அளவுபடாத நமதாத்ம சொரூபத்தில் மயக்கத்தைச்செய்கின்றமாயாவிலாசத்தினுல் இங்ஙனந்தோற்றும். அந்தத்தில் பெத்தமுத்தியும்இல்லை சொல்லுகின்ற மாயையென்னுஞ் சொல்லும்இல்லை.=எ-று. (உங)

பழுதையதனிற்றோன்றியிடும் பாம்பையுள்ளபடிநோக்கில்
பழுதையாயேதோன்றியிடும் பாம்புமதுவாய்விடுமஃதின்
பழுதில்சிவத்திற்றோன்றியிடும் பன்மையுலகைநோக்கியிடின்
பழுதில்சிவமேயாய்த்தோன்றும் பன்மையுலகுமதுவாய்ப்போம்.

(இ-ள்.)=பழுதையில் அத்தியாசமாகத் தோற்றுகின்ற சர்ப்பத்தை யதார்த்தமாய்ப்பார்க்குமிடத்தில் பழுதையாகவே காணப்படும் சர்ப்பமும் அப்பழுதையாகிப்போம் அத்திருஷ்டாந்தம்போல.களங்கமற்ற பிரமத்தில் அத்தியாசமாய்க்காணப்பட்ட பலவுலகங்களை யதார்த்த திருஷ்டியாய்ப்பார்க்குமிடத்தில் குற்றமின்றியபிரமஸ்வரூபமேயாகிப்பிரகாசிக்கும்.பலவுலகங்களும்அப்பிரமசொரூபமேயாம்.=எ-று-()

தோன்றிவிளங்கும்பொருளெல்லாந் தொல்வேதாந்தவிசாரணையின்
ஊன்றிநோக்கியனுதினமு மூகமதனிற்பரிசயித்தால்
தோன்றிவிளங்குமறிவொன்றே சொன்மாத்திரமாய்விடுமுலகம்
ஊன்றிநோக்காதவர்கட்கே யுளதுபோலத்தோன்றியிடும்.

(இ-ள்-)=உண்டாகிப் பிரகாசிக்கின்ற சகல வஸ்துக்களும் பழமையாகிய வேதாந்தவிசாரத்தில் நிலைத்துப்பார்த்துச்சதாகாலமும்யுத்தியினால் ஆராய்ந்தறிந்தால் உண்டாகிப் பிரகாசிக்கின்ற பிரமமாத்திரமேயாம். பிரபஞ்சமானது வசனமாத்திரமாய்ப்போம். நிலைத்துப்பாராதவஞ்ஞானிகளுக்கே யதார்த்தம்போல் விளங்கும்.=எ-று. (௨௫)

ஏகமாகிநின்மலமா யிருக்குநமக்கிப்பந்தமெனும்
மோகம்வந்ததேதென்று முன்பின்பாராதிப்பந்தம்
போகவழியேதெனநாடிப் பொருந்தும்வேதவிசாரணையால்
யூகமதனிற்சிதைக்கினதி னுள்ளவியல்புபின்றோன்றும்

(இ-ள்,)=அத்வைதமாகி மலரகிதமாய் இருக்கின்ற எமக்கு இந்தப் பந்தமென்கிற மயக்கம் உண்டானது எதினாலென்று முதலும் முடிவும் விசாரியாமல் இந்தப் பந்தம் நீங்கு மார்க்கமெதுவென்று விசாரித்துப்பொருந்துகின்ற உபநிஷத்விசாரத்தினாலும் நுண்ணறிவினாலு மழித்தாலப்பந்தத்திலுண்டானசுபாவம் பிற்பாடு தோற்றும்.=எ-று.

பரவைதானேயோரலையிற் பலவாய்விளங்குமோரலையில்
பரவைநீங்கியொன்றாகிப் பழையபடியேவிளங்குமதின்
பரவுஞ்சொருபஞ்சங்கற்பப் பகுதியதனிற்பலவாகிப்
பரவுசங்கற்பத்தொன்றாய்ப் பழையபடியேவிளங்கியிடும்.

(இ-ள்,)=கடலொன்றே ஓரலையினால் நுரைதிவலை குமிழியாதியனாவாகத் தோற்றும் ஓரலையினால் அங்ஙனம் பரவுதலின்றிக்கடலொன்றேயாகிமுன்போலவே தோற்றும், அத்திருஷ்டாந்தம்போல யாவருந் துதிக்கின்றபிரமசொரூபமானது சங்கற்பப் பகுப்பினால்நானாவடிவங்களாகிச்சொல்லுகின்ற சங்கற்பநாசத்தினால் அத்வைதமாய் முன்போலவே பிரகாசிக்கும்.=எ-று. (உஎ)

கடங்கடம்துகாரணத்தைக் காட்டிடாதுமுன்விளங்கும்
படங்கடாமுமப்படியே பகர்காரணமுநீங்காது
சடங்களாகுமிச்சகமுந் தான்முன்விளங்குங்காரணமாம்
இடங்கொள்சொரூபத்தையுங்காட்டா திருக்குமதைவிட்டகலாதே.

(இ-ள்,)=கடகலசங்கள் அவ்வவற்றின் காரணமாகிய மண்ணைக்காட்டாமல் முன்னாகத் தோற்றும், வஸ்திரங்களும் அதுபோலவே சொல்லுகின்ற காரணமாகிய நூலையும் விட்டொழியாது, மித்தையாகின்ற இந்தப் பிரபஞ்சமும் காரணமாகிய பரிபூரணமான பிரமசொரூபத்தைக்காண்பியாமலும் அப்பிரமசொரூபத்தை விட்டொழியாமலும் தானேமுன்னாகப் பிரகாசிக்கும்.=எ-று, (உஅ)

மரத்தைநோக்கின்மதகரியு மறைந்துவிளங்குமதைநோக்கின்
மரத்தைமறைத்துத்தான்விளங்கும் வாறுபோலச்சகமுழுதும்
பரத்தைநோக்கினதின்மறைந்து பரமாய்விளங்குஞ்சகநோக்கில்
பரத்தைமறைத்துத்தான்விளங்கும் ப்ரமேயனைத்துமாதலினால்.

(இ-ள்,)=மரவடிவத்தைப்பார்க்குமிடத்து மதயானையும்மறைந்துநிற்கும் அவ்யானையைப்பார்க்குமிடத்துமரத்தை மூடியானையேதோற்றும் அத்திருஷ்டாந்தம்போல சகலசராசரப் பிரபஞ்சங்களும் பிரமமாகப்பார்க்குமிடத்து அப்பிரமத்திற் கரைந்து பிரமமாகப் பிரகாசிக்கும் உலகமாகப் பார்க்குமிடத்துப்பிரமசொரூபத்தை மறைத்துஅப்பிரபஞ்சமே தோற்றும் ஆகையால் சர்வம் பிரமமயமாம்,=எ-று. ()

நாகத்துதிக்கைதனைநோக்கி னாசிகரமுந்தோன்றியிடும்
நாகநயனந்தனைநோக்கி னயனஞ்செவியுந்தோன்றியிடும்
ஏககருவிபார்த்தபடி யிரண்டுவிதமும்விளங்குமதின்
ஏகபரமும்பார்த்தபடி யிலகுமுலகுஞ்சித்ததுமாய்,

(இ-ள்,)=யானையின் தும்பிக்கையைப்பார்க்குமிடத்துகிராணேந்திரியவிடயமும் பாணீந்திரியவிடயமும் தோற்றப்படும், பாம்பின்கண்ணைப்பார்க்குமிடத்துச் சக்ஷிந்திரியவிடயமும் சுரோத்திரேந்திரியவி

டையுமும் தோற்றப்படும் ஒரிந்திரியக்கருவியில் பார்த்தபிரகாரமே இருவகைவிஷயங்களும்பிரகாசிக்கும் அத்திருஷ்டாந்தம்போல அத்வைதப் பிரமமும்இருந்தபடியே சடசித்துக்களாய்ப்பிரகாசிக்கும்.=எ-று

ஊனும்போகமெமதென்றே யுன்னல்விசாரமிலாமையினால்
நீநானவைகளிவைகளென நிலைபோல்விளங்கியிடுமிந்த
நாநாவிதமாஞ்சகமுழுது நாமேயன்றிவேறில்லை
நானாய்நோக்கிற்றானாகுஞ் சகமாய்நோக்கிற்சகமாகும்,

(இ-ள்,)=ஆத்மவிசாரமின்மையால் தேகபோகங்களை எம்முடையதென்றுசிந்திப்பது, நீ நான் அதுகளிதுகளென்றஸ்திரம்போல்தோற்றும் (அங்ஙனந் தோற்றுகின்ற) இப்பலவகையாகிய பிரபஞ்சமுழுமையும் நமது சொரூபமேயன்றி அன்னியமில்லை, ஆத்மாவாய்ப்பார்க்கில் ஆத்மாவாகும், பிரபஞ்சமாய்ப்பார்க்கில் பிரபஞ்சமாகும்,=எ-

மாயையெனுமிவ்வுரைக்கருத்த மதிக்கின்யாதொன்றிலாததுவே
மாயையெனவிப்படியிருக்க மதிப்பரதனையிருவகையாய்
மாயைமெய்யென்றுரைத்திடுவர் மயக்கப்பட்டுத்தனைமறந்தோர்
மாயைபொய்யென்றுரைத்திடுவர் மயக்கநீங்கித்தனையறிந்தோர்.

(இ-ள்,)=மாயையென்கின்ற இவ்வசனத்திற்குப்பயன் ஆராயுமிடத்துஒன்றுமில்லாததேமாயையென்பது. இங்ஙனமிருக்க அதைஇரண்டுவிதமாய்ச்சொல்லுவார்கள்.எங்ஙனமெனில்மயக்கமடைந்துதன்னைமறந்தவர்கள் மாயையைஉண்மையென்று சொல்லுவார்கள், மோகமில்லாமல் ஆத்மாவை அறிந்தஞானிகள் மாயையைமித்தையென்றுசொல்லுவார்கள்,=எ-று, (௩௨)

நாமரூபந்தனைநோக்கி நாடன்மனமும்புறமுகமும்
நாமரூபந்தனைநீக்கி நாடலறிவுமுண்முகமும்
நாமரூபத்தெவ்வளவு நாட்டஞ்சொரூபந்தோன்றாது
நாமரூபநாட்டம்விடி னமதுசொரூபந்தோன்றியிடும்,

(இ-ள்,)=நாமரூபவிஷயங்களை நோக்கிப்பார்ப்பதுமனமும்பகிர்முகமுமாம். நாமரூப விஷயங்களை விட்டுப்பார்ப்பது ஞானமும்அந்தர்முகமுமாம்.நாமரூபங்களில் எவ்வளவு காலம் திருஷ்டியோ (அவ்வளவு காலமும்) அறிவுதோன்றாது. நாமரூபங்களில் திருஷ்டிநீங்கினால் நமது ஆத்மசொரூபம்தோற்றிவிளங்கும்,=எ-று, (௩௩)

அரையகுமாரன்புலையருட னணுகிமறந்துமொருவரால்
அரையகுமாரனெனவறியி லகஞ்செய்போதுமறவாதின்

தரையிலாசானெழுந்தருளித் தனைப்பார்த்தநீயெனவுரைக்கில்
புரையிலதுவாமவ்வத்தை பொருந்தும்பொழுதுமறவானால்

(இ-ள்.)=இராஜகுமாரன்நீசர்களோடு சேர்ந்து மறந்திருந்தும்ஒரு புருடனால் ராஜகுமாரனென்று அறிந்தால் அவ்வசனம் எந்தக்காலமும் மறவாததுபோல பூமியில் ஆசிரியர்எழுந்தருளிவந்து ஆத்மாவை நோக்கிப்பிரமமே கூடஸ்தனென்றுஉபதேசிக்குமிடத்து மாசற்ற பிரமசொரூபமாவன். அவஸ்தாத்திரயங்கள் அடையுங்காலத்திலும் மறக்கமாட்டான்.=எ-று. (கச)

படியிற்பொருளின்மெய்யொன்று படிறொன்றிந்தவிருவகையும்
முடிவின்மெய்பொய்யறிந்திடலா மொழியுமிந்தத்தனைமைபோல்
கொடியவுலகைமெய்யெனவே கூறுமதையுமறிந்திடலாம்
முடிவில்சகம்பொய்யேயாகு முத்தியொன்றேமெய்யாகும்.

(இ-ள்.)=உலகத்திலுள்ள வஸ்துவில்உண்மையொன்றுபொய்யொன்றும் இவ்விரண்டுவிதத்திலும் கடைசியில் மெய்யும்பொய்யும் தெரியலாம். சொல்லுகின்ற இத்திருஷ்டாந்தம்போலக் கொடுமையான உலகத்தைச்சத்தியமென்று சொல்லுகிறதையும் அந்தத்தில் தெரியலாம், (ஆதலால்) உலகம் அசத்தியமேயாம். ஏகரசமானமோட்சமே சத்தியமாகும்,=எ-று, (கரு)

அகிலந்தோன்றும்பொழுதுமறைந் ததிட்டானமதாய்விளங்கியிடும்
அகிலநீங்கிற்றான்விளங்கு மந்தச்சச்சிதானந்தம்
அகிலந்தோன்றும்பொழுதுமறைந் ததுதோன்றுதல்போலதுதோ
அகிலந்தோன்றாததனின்மறைந்த தனாலகிலமசத்தாமே. (ன்றில்

(இ-ள்.)=அவ்வகைப்பட்ட அஸ்திபாதிப்பிரிய வஸ்துவானது சகத்தோற்றரவில் சீவதிருஷ்டியில் மறைந்து அதிஷ்டானமாத்திரமாய்ப் பிரகாசிக்கும் சகத்தோற்றரவு நீங்கினால் அப்பிரமமே பிரகாசிக்கும் சகத்தோற்றரவில் மறைபட்டு அவ்வுலகமே தோற்றுவதுபோல பிரமந்தோன்றில் அப்பிரமத்தின் மறைந்து சகந்தோன்றாது அவ்வனுபவத்தில் உலகம் அசத்தியமாம்.=எ-று, (கசா)

முத்தியாதோவெனவெண்ணி முயங்கவேண்டாமிஃதுறுதி
முத்தியுளதேற்பந்தமுண்டா முத்தியொருகாலையுமில்லை
முத்திதானஞ்சகம்வேறில் மோகமதிற்காண்பதைப்போக்கில்
முத்தியாகுமிந்நிலையை முயன்றுவருந்திநிலைகொள்வாய்,

(இ-ள்.)=மோட்சம் எஃதோவென்று நினைந்துமுயற்சிக்கவேண்டாம். இதுசத்தியம். மோட்சமுண்டானால் பெத்தமுளதாகும் மோட்சம் ஒருகாலத்திலுமில்லை. மோட்சம் தானான பிரமஸ்வரூபமே யாம் உலகம் அன்னியமின்று, மோகத்தினால் பார்ப்பதை நசிக்கில் மோட்சமாம். இவ்வநுபவத்தை முயற்சித்துப் பிரயாசைப்பட்டு நிலையடைவாய்,=எ-று. (௩௭)

இல்லாமாயைதங்கணிலை யாருநிற்கவம்மம
பொல்லாப்பிறப்பிற்பட்டதுமாய்ப் பொக்கமிகவுந்தவிர்த்ததுமாய்
நல்லாரிணக்கஞ்சேர்ந்ததுமாய் ஞானவிசாரமுதித்ததுமாய்
எல்லாமாம்வீடடைந்ததுமா யார்க்குங்காட்டிமறைந்திடுமே.

(இ-ள்.)=அவ்வவர்களாத்மநிலைமையில் எவர்களும் இருக்க அதிசயம்அதிசயம், சடமானமாயையானது பொல்லாதஜன்மத்தில் அகப்பட்டதாகவும் பொய்யை அதிகமாய்ஒழித்ததாகவும் சாதுசங்கத்தைச்சேர்ந்ததாகவும் ஆத்மவிசாரணை உண்டானதாகவும் சர்வமுமாகிய மோட்சத்தை அடைந்ததாகவும் எவர்களுக்கும் காண்பித்து மறையும்,=எ-று. (௩௮)

எல்லாநீங்கிச்சற்குருவை யெங்குந்தேடியடைந்தருளி
நல்லாருணருஞானநூல் வின்றுவிசாரஞ்செய்வதுவும்
பொல்லாமனத்தையொடுக்கிநிட்டை பொருந்திநோக்கலாநோக்கும்
இல்லாமாயைதனைத்துணிவா யில்லையெனவேகாண்குதற்கே.

(இ-ள்,)=சர்வசங்க பரித்தியாகஞ்செய்து ஞானாசிரியனை எவ்விடத்துந்தேடிச் சரணமடைந்து பெரியோர்கள் அறிகின்றஞானசாத்திரங்களைப்படித்து விசாரணைசெய்வதும் பொல்லாத மனதை அடக்கிநிஷ்டையடைந்து பாராமற்பார்ப்பதும் மித்தையானமாயையைத்தெளிவாய் இல்லையென்றே பார்ப்பதற்காம்,=எ-று. (௩௯)

விளங்குஞ்சகங்களனைத்தினிலும் விளங்குநாமாதிகணீக்கி
விளங்குமதைமாத்திரநோக்கில் விளங்கும்பிரமமக்கணமே
விளங்குநாமாதிகளுமதாய் விளங்கும்வேறாய்விளங்காது
விளங்குமிந்தநிலையெவர்க்கும் விளங்குமவிரோதமதாயே.

(இ-ள்.)=தோற்றுகின்ற சகலபிரபஞ்சங்களிலும் தோற்றுகின்றநாமரூபங்களைவிட்டுப் பிரகாசிக்கின்ற அறிவைமாத்திரம் பார்க்குமிடத்துப் பிரமஸ்வரூபமானது அக்ஷணமே பிரகாசிக்கும் தோற்றுகி

ன்ற நாமரூபங்களும் அப்பிரமமாய்ப் பிரகாசிக்கும் அன்னியமாய்த் தோன்றாது, பிரகாசிக்கின்ற இச்சுக நிலையானது எவர்களுக்கும் விரோதமின்றிப் பிரகாசிக்கும்,=எ-று. (சய)

நாமரூபம்விளக்கல்பரம் நாடலுயிராமவைமாயை
நாமருபந்தனைநோக்கி நாடச்செய்தலஞ்ஞானம்
நாமரூபத்திவ்வளவு நாட்டமெனவேசெய்தல்வினை
நாமரூபந்தனைநோக்கி நாடிடத்திலிவைநிகழும்.

(இ-ள்.)=நாமரூபப்பிரபஞ்சங்களைப் பிரகாசிப்பது ஈஸ்வரன் அவற்றினைப்பார்ப்பது சீவனும் அதுகள்மாயாமலம். நாமரூபப் பிரபஞ்சங்களைக்கூர்ந்து பார்க்கச்செய்தல் ஆணவமலம். நாமரூபப்பிரபஞ்சத்தில் இவ்வளவுகாலம திருஷ்டியென்று செய்வித்தல் கன்மமலம். நாமரூபப்பிரபஞ்சங்களைக்கூர்ந்து பார்க்குமிடத்தில் இவ்வைந்தும்பிரகாசிக்கும்-=எ-று. (சக)

உருவநாமநோக்கிடத்தி லுளவாமித்தவைவகையும்
உருவநாமநீக்கிடத்தி லொன்றுமிவைகளிலவாகிச்
சொருபமொன்றேநிகழ்தலினாற் சொன்னவிவைகளைவகையும்
சொருபமன்றிவேறில்லை தோன்றும்விவகாரத்திசையில்.

(இ-ள்.)=நாம ரூபங்களைப் பார்க்குமிடத்தில் இவ்வைந்துவிதமும் உண்டாயினவாம். நாமரூபங்களை நீக்குமிடத்தில் இவைகளொன்றும் இல்லனவாகிப் பிரமமொன்றுமே விளங்குந்தன்மையினால் முற்சொல்லிய இந்தஐந்துவிதமும் பிரமமன்றி அன்னிய மில்லை விவகரிக்குமிடத்தில் அவ்வைந்தும் பிரகாசிக்கும்.=எ-று. (சஉ)

விவகாரத்திற்பகுப்புகளாய் விரியும்பரமார்த்தம்மதனில்
சிவகாரமதாய்விளங்கியிடுஞ் சிவமேயனைத்துமாதலினால்
பவகாரியத்தையுடையோர்க்குப் பகுப்பேயென்றுந்தோன்றியிடும்
பவகாரியத்தையொழிந்தோர்க்குப் பகுப்பொன்றின்றிச்சிவந்தோன்
(றும்.

(இ-ள்.)=விவகாரதிசையில் பிரிவுகளாகிப் பரவியிருக்கும். பரமார்த்ததிசையில் பிரமாகாரமாய்ப்பிரகாசிக்கும். பிரமமே சகலமுமாம் ஆகையினால் பிறப்பையுடையவர்களுக்குப் பிரிவுகளே எப்போதும்பிரகாசிக்கும். பிறப்பைநீங்கின மகான்களுக்கு ஒருபிரிவுமில்லாமல் பிரமம்பிரகாசிக்கும்.=எ-று. (சஙூ)

பந்தத்திசையிற்பலவென்றும் பரமார்த்தத்திலொன்றென்றும்
இந்தச்சடங்குசொருபத்தி லென்றுமில்லைநோக்கியிடின்
எந்தக்காலுமொருபடித்தா யிலங்குஞ்சொருபமிவைமாயா
தொந்தத்ததனிற்றோன்றியிடுஞ் சொருபத்தாரோபிதமாகும்.

(இ-ள்,)=அஞ்ஞானதிசையில் நாநுவென்றும் ஞானதிசையில்ஏகமென்றுஞ்சொல்லப்பட்ட இக்கற்பனைகள்பிரமத்தில்எப்போதுமில்லை பார்க்குமிடத்துஎக்காலத்தும் ஒரேபிரகாரமாய்ப் பிரமஸ்வரூபமானது பிரகாசிக்கும் இதுகள்மாயையின்தொடர்பினால் பிரகாசிக்கும்பிரமத்தில் அத்தியாசமாகும்,=எ-று. (௪௪)

மித்தியவாதிவேதாந்தி விளங்குஞ்சைவசித்தாந்தி
சத்தியவாதியிருவர்களுஞ் சாற்றுந்தங்கட்கடுக்காதை
மித்தியவாதிசகத்தினுக்கு விளம்புஞ்சிருட்டிமுடிவினின்று
சத்தியவாதிசிவமொழிந்து சற்றும்வேறில்லெனவுரைக்கும்.

(இ-ள்,)=வேதாந்தியானவன் உலகத்தைப் பொய்யாகவாதிப்பவன் பிரகாசிக்கின்ற சைவசித்தாந்தியோவென்றால் மெய்யாக வாதிப்பவன் இவ்விருதிறவரும் தங்களுக்குத் தகாதவற்றைச் சொல்லுவார்கள் வேதாந்தியோ பிரமத்தினின்று உலகத்திற்குச் சிருஷ்டியாதிய கற்பனைகளைச்சொல்லுவன் சைவசித்தாந்தியோ சிவச்செயலன்றிக்கிஞ்சித்தும்வேறேயில்லையென்று சொல்லுவன்,=எ-று. (௪௫)

சகமதென்பதில்லையெங்குந் தானேநின்றுவிளங்கியிடும்
சகமதெனவேதோன்றிடுதல் தனதுசங்கற்பம்மதனில்
அகமதனிலேகண்டுணரா தவையிற்சிக்கிப்பந்தமுறும்
அகமதனிலேகண்டகற்றி லப்போபண்டைப்படிநிகழும்.

(இ-ள்,)=பிரபஞ்சமென்பதுஇல்லை எவ்விடத்தினும் பிரமமேநின்றுபிரகாசிக்கும் பிரபஞ்சமென்றுகாணப்படுவது தன்னுடைய சங்கற்பஜாலத்தினாலாகும் சீவனானவன் அகத்திற்கண்டறியாமல் அதுகளில் அகப்பட்டுப் பந்தப்படுவன் அகத்திற்பார்த்துநீக்கினால் அப்போதுமுன்போலவேபிரகாசிப்பன்,=எ-று. (௪௬)

பந்தமின்றிவீடின்றிப்பரமே யெங்கும்விளங்கிடவும்
பந்தம்வீடென்றுரைத்திடுதல் பார்க்கின்மாயாமோகமதில்
சிந்தைகளிரிவேபந்தமதாஞ் சிந்தையொடுக்கமேவீடாம்
இந்தவகைபார்பந்தம் வீடியம்பு[illegible]

(இ-ள்,)=பெத்தமுமின்றி முத்தியுமின்றிப் பிரமமே எவ்விடத்தி லும்பிரகாசிக்கவும் பெத்தமுத்தியென்று பேசுவது ஆராய்ந்துபார்க் குமிடத்து மாயாமயக்கமாகும் அதுபோல மனவிரிவே பெத்தயாம் மனவொடுக்கமேமுத்தியாம. பெத்தமுத்தியென்பது இவ்விதமாகும் இன்னஞ்சொல்லுகின்றதே அபவாதயுத்தியாகும்;=எ-று. (சஎ)

தோன்றிநிகழுமுலகெல்லாஞ் சொரூபமேமற்றுருநாமம்
தோன்றிநிகழ்தல்மாயையே சொருபம்விடவும்வேறன்று
தோன்றிநிகழுமுருநாமஞ் சொருபம்விடவேறெனவுன்னித்
தோன்றிநிகழ்தல்பந்தமதாஞ் சொருபமெனவேயுனல்வீடாம்.

(இ-ள்,)=உண்டாகிவிளங்குகின்ற சகலப்பிரபஞ்சங்களும்பிரமமே நாமரூபங்கள் உண்டாகிவிளங்குகின்றது மாயாமோகமே (ஆயினும்) பிரமத்தையல்லாமலும் அன்னியமல்ல. உண்டாகிவிளங்குகின்ற நா மரூபங்கள் பிரமத்தையன்றி அன்னியமென்றுநினைத்து விளங்குவது பெத்தமாகும்பிரமமென்றுநினைப்பதே முத்தியாம்,=எ-று. (சஅ)

உருவநாமமவைக்கிருப்பு முதிப்புஞ்சொருபத்தினையன்றி
உருவநாமமவைதமக்கே யொருகாலையினுமிலதாகும்
உருவநாமமவைநோக்க லொருவிநமையேநோக்கியிடின்
உருவநாமநிகழ்ந்திடா தொருநம்வடிவாயேநிகழும்.

(இ-ள்,)=நாமரூபங்களுக்கு இருப்புந் தோற்றமும் பிரமத்தையல் லாமல் நாமரூபங்களுக்கே ஒருகாலத்திலும்இல்லையாகும். நாமரூபங் களைப்பார்க்குதல்நீங்கிநமதாத்மசொரூபத்தையே பார்த்தால்நாமரூ பங்கள்விளங்காமல் ஒப்பற்றநமதுசொரூபமாகவேவிளங்கும்;=எ-று.

பந்தமென்றும்வீடென்றும் பயிலுநினைவேபந்தமதாம்
பந்தமெங்காம்வீடெங்காம் பரத்தைவிடவேறிலாமையினால்
தந்தஞ்சங்கற்பந்தனிலே தாமேமோகித்திடுமுயிர்கள்
தந்தமசங்கற்பந்தனிலே தாமேநீங்கியிடுமோகம்.

(இ-ள்,)=பெத்தமென்றும் முத்தியென்றும்பழகுகின்றஎண்ணமே பெத்தமாம் பிரமத்தையொழிய அன்னியமின்மையால் பெத்தமெவ் விடத்தாகும் முத்திஎவ்விடத்தாகும். தங்கள்தங்களுடைய சங்கற்பத் தில்தமக்குத்தாமே சீவர்கள்மயங்குவார்கள். தங்கள்தங்களுடையநிரு விகற்பத்தில் தமக்குத்தாமே அந்தப்பிராந்தி ஒழிந்துபோவார்கள்—

உருவநாமந்தனைநோக்கி லொருதன்னிலையைநீங்கினதாம்
உருவநாமந்தனைநீக்கி லொருதன்னிலையேகின்றதுவாம்
உருவநாமமவையிரண்டு மொருதன்வடிவேயெனக்காணில்
உருவநாமந்தானேயா யொளிருமதுவேமுத்தியுமாம்,

(இ-ள்,)=நாமரூபங்களைப்பார்க்குமிடத்து ஒப்பற்றதனது சொரூபநிலைமையை விட்டதாகும்நாமரூபங்களைவிட்டால்ஒப்பற்றதனதுசொரூபநிலைமையில் இருந்ததாகும்நாமரூபங்களிரண்டும் ஒப்பற்றதனது சொரூபமேயென்றுபார்க்கில்நாமரூபங்கள் தனதுசொரூபமேயாகிப் பிரகாசிக்கும் அஃதே மோக்ஷமுமாகும்,=எ-று, (ருக)

கொள்ளுநெறியேதேதுபந்தங் கூடும்வீடேதெனவேண்டாம்
உள்ளும்புறம்புமெனுமிவையி லுதவுமெஃதுதனக்கதினின்
றெள்ளுஞ்சங்கற்பங்களெலா மிரியநோக்கிநின்றதன்னை
உள்ளும்புறம்புமின்றியெங்கு மொளியாய்க்காணலாகியிடும்.

(இ-ள்,)=அடையுமார்க்கம்யாது பெத்தம்யாதுமுத்தியாது என்று சொல்லவேண்டாம் அகமும்புறமும் என்கின்றவிவையில்தனக் கனுபவமாகின்றது எதுவோ அதனிலிருந்து நினைக்கின்ற சகலசங்கற்பங்களும் கெடப்பார்த்தால்சேடித்த தனதுசொரூபத்தைஅகமும்புறமுமில்லாமல் எவ்விடத்திலும்சுயம்பிரகாசமாய்க்கண்டனுபவிப்பதாகும்.=-எ-று, (ருஉ)

ஒளியேயெங்கும்விளங்கிடு மவ்வொளியில்விளங்குமுலகெல்லாம்
ஒளியேயன்றிவேறாமோ வொளியையறியாருலகென்பர்
ஒளியேயன்றியுலகு தனக்கொருகாரணமுமிலையதனால்
ஒளியேயனைத்துந்திரைநுரைக ளுவரியலதுவேறாமோ.

(இ-ள்.)=சிற்பிரகாசமே எவ்விடத்தும் பிரகாசிக்கும் அந்தச்சிற்பிரகாசத்தில் பிரகாசிக்கின்ற சர்வப்பிரபஞ்சங்களும் சிற்பிரகாசமேயன்றி அன்னியமாகுமோ சிற்பிரகாசத்தைத் தெரியாதவஞ்ஞானிகள் உலகமென்றுசொல்லுவார்கள் சிற்பிரகாசத்தை யொழிந்து உலகத்திற்கு ஒரேதுவும்இல்லை அவ்வனுபவத்தினால் சர்வமும் சிற்பிரகாசமே அலைநுரைகள்சமுத்திரமன்றி அன்னியமாகுமோ,=எ-று, ()

மாயைவேறென்றெனவுன்னி மதிக்கவேண்டாம்பேதமதி
மாயையாகுமற்றஃதை வருந்திமுயன்றுபேர்த்திடுக
மாயைநீக்குமிந்த-மதிவந்தவழியேதெனவேண்டாம்
மாயைபெறிலம்மதியை வதைக்கிலதுவந்தது தோன்றும்,

(இ-ள்,)=மாயையென்பதை வேறுபொருளென்றுநினைந்து அளவிடவேண்டுவதில்லை பேதபுத்தியே மாயையென்பதாம் அப்பேதபுத்தியை வருத்தப்பட்டுமுயற்சித்து நீக்கினுல் மாயையென்பதுகெடும் இப்பேதபுத்திவந்தவகை யாதென்று விசாரிக்கவேண்டுவதில்லை சற்கருமமாதிகளால் அப்புத்தியை நசிக்கில்அப்புத்தியானது வந்தவழிதெரியும்.=எ-று. (ருச)

விளங்கியிடுமிவ்வுலகெல்லா மித்தைவடிவேயென்பதுவும்
விளங்குமெய்குந்தற்சொருப விமலவடிவேயென்பதுவும்
விளங்கிலருத்தமொன்றேயாம் வேறாய்க்காணுமஃதகற்றி
விளங்குமொளியாயேகாண்கில் விளங்குமருத்தமொன்றாயே,

(இ-ள். =தோற்றப்படுகின்ற இப்பிரபஞ்சமெல்லாம் மித்தையாரூபமே என்றுசொல்வதும் எவ்விடத்தும் தத்பதசொரூபமாகியமலரஹிதமான பிரமசொரூபமே பிரகாசிக்குமென்று சொல்லுவதும்அனுபவமாயின் ஓரேயர்த்தமாம் அன்னியமாய்ப்பார்க்கின்ற அந்தத்துவித திருஷ்டியை ஒழித்துப்பிரகாசிக்கின்றசிற்பிரகாசமாகவேபார்க்கில் ஓரேயர்த்தமாய்ப் பிரகாசிக்கும்,=எ-று (ருரு)

தனதுசங்கற்பந்தனிலே சகங்களாகிவிளங்கியிடும்
தனதசங்கற்பந்தனிலே சகம்போயொடுங்குமதனுலே
தனதுவடிவேசகங்களெல்லாந் தன்னைவிடவேறிலைதங்கம்
தனதுவடிவைவிடப்பணிக டாம்வேறாகிவிளங்கிடுமோ,

(இ-ள்,)=தனதுசங்கற்பத்தினுற் பிரபஞ்சங்களாய்க்காணப்படும் தனதுசங்கற்பநாசத்தினுற் பிரபஞ்சம் போயடங்கும் அவ்வனுபவத்தினுல் தற்சொருபமே சகலபிரபஞ்சங்களும் தற்சொருபத்தையன்றி அன்னியமன்று தங்கத்தின்சொருபத்தையல்லாமல் ஆபரணங்களும் அன்னியமாகிப் பிரகாசிக்குமோ,=எ-று, (ருசு)

நிலைமைநீங்கிற்சகமுதித்து நிசமுமாகுமற்றவையின்
நிலைமைஞானவிசாரணையினிசம்போ யொடுங்குந்தோற்றரவும்
நிலைமையாகுந்தனைநோக்கி னீங்கிமறையுமிச்சகத்தின்
நிலைமையொருவேறுவிலுதிக்கு நீக்குமிருமையேதுவினில்.

(இ-ள்,)=சொருபஸ்திதியையொழித்தால்உலகந்தோன்றிஉண்மையுமாம் அப்பிரபஞ்சத்தினிலைமை ஆத்மவிசாரத்தினுல் நிசமென்பது போய்அடங்கும்காட்சியும் ஸ்திரமாகியதற்சொருபத்தைப்பார்க்கில்

மறைந்துபோகும்இப்பிரபஞ்சநிலைமைஒருகாரணத்தினால்தோற்றும் இரண்டுகாரணத்தினால்ஒழியும்-எ-று ஒருமேவதுவென்பதுசொருபஸ்திதியைமறப்பது இருமையேதுவென்பது விசாரஞானமும்அனுபவஞானமுமெனக்கொள்க. (௫௭)

எல்லாநாமெப்படியாவோமென்ன வேண்டாமிலக்கணம்பார்த்
தெல்லாநோக்கியிடமிடத்திலிருப்புந் தோற்றாவுமின்பும்
எல்லாவிடத்துமுண்டாகு மியல்புமவையேயறிந்திட்டால்
எல்லாமெங்கேதோன்றிடுமிங் கிதனாலெல்லாநாமாகும்.

(இ-ள்,)=சர்வமும் யாம் எவ்விதத்தில் ஆகிவிளங்குவோமென்று சந்தேகிக்கவேண்டுவதில்லை. இலட்சணத்தைக்கண்டு சர்வத்தையும் ஏகாகாரமாகப்பார்க்குமிடத்தில் சத்தும்சித்தும் ஆனந்தமும்சகலவிடங்களிலும் உள்ளதாகும். சுபாவமும் அதுகளே. அந்நானென்பதைநோக்கில் சர்வமும் எவ்விடத்தில்தோற்றும். இவ்விடத்து இவ்வநுபவத்தினால் சர்வமும்நாமேயாம்,=எ-று, (௫௮)

வெள்ளிவிகற்பமதிற்கிளிஞ்சில் விளங்கும்விகற்பந்தனைநீக்கித்
தள்ளின்வெள்ளியென்பதுபோய்த் தானேவிளங்குமக்கிளிஞ்சில்
வெள்ளியென்றபொழுதுமல விகற்பமென்றபொழுதுமது
வெள்ளியாகிநீங்கினதின் விமலத்ததுபோன்மாயையுமே.

(இ-ள்,)=கிளிஞ்சிலானது வெள்ளியென்னும் விகற்பத்தினால் பிரகாசிக்கும் அவ்விகற்பத்தை நீக்கிப்பார்க்கில் வெள்ளிவிகற்பம்போய் அந்தக்கிளிஞ்சில் தன்மயமாகவே பிரகாசிக்கும், வெள்ளியென்று நினைத்தபோதும் வெள்ளி அல்ல விகற்பமென்று நினைத்தபோதும்வெண்மையாகி ரசிதப்பிராந்தி நீங்கினதுபோல் பிரமத்தில்மாயையென்பதும் அதுபோலாம்,=எ-று. (௫௯)

ஒன்றேயென்னின்முத்தியில்லை யொருவன்வேறேயுண்டென்னில்
ஒன்றேயாகமாட்டான் மற்றொன்றாமென்னிலொன்றுகெடும்
ஒன்றேயென்றவாதிகட்கு மோதுமிரண்டேயென்றவர்க்கும்
ஒன்றேயிரண்டுமாமொன்றே யுண்மைகற்பிதமிரண்டே.

(இ-ள்,)=ஏகமேயென்றால் மோட்சமில்லை. ஓர்புருஷன்பின்னமாகஉண்டென்றால் ஒன்றானஐக்கியம்பெறான். ஒன்றாகுமென்றால் ஒன்றுநசிக்கும். மித்தியா வாதிகளாகிய வேதாந்திகளுக்கும் சொல்லுகின்ற சத்தியவாதிகளாகிய சைவசித்தாந்திகளுக்கும் ஓர்வஸ்துவே இரண்டுநிச்சயமுமாம் (ஆதலால்) அத்வைதமேசத்தியம் துவிதமேஅசத்தியம் =எ-று, (௬௰)

விகற்பமிலதாமுதற்றோன்றி விளங்கும்விமலமதினின்றும்
விகற்பமதனிற்சகந்தோன்றும் விண்ணிற்பீலிதோன்றுவபோல்
விகற்பமதிற்றோன்றுவதொழிந்து வேறல்லெனவேவிடுத்ததனை
விகற்பமின்றியேநோக்கின் விளங்கும்விமலந்தானேயே,

(இ-ள்,)=பிரமம் நிருவிகற்பமாய்ப்பிரதமத்தில்பிரகாசிக்கும். விகற்பத்தினால் அதன்கண்நின்றும் வானத்தில் மயிற்குஞ்சந்தோற்றுவது போல் பிரபஞ்சந்தோன்றும்(ஆதலால்) விகற்பத்தில் தோற்றுவதை நசித்து அன்னியமன்றென்றுவிட்டு அதை ஓர் விகற்பமுமில்லாமல் பார்க்குமிடத்துப் பிரமம் தன்மயமாகவே பிரகாசிக்கும்,=எ-று.(சுக)

இந்தவிடயமவையில்வரு மின்பும்பேரின்பத்திருந்தே
வந்தலேசமிட்டமது வந்துகிடைத்தவக்கணமே
அந்தமுகமாய்மதிதிரும்பி யறிவானந்தங்கணம்புசிக்கும்
அந்தமுகமேயெக்காலு மாகினனைத்துமடைந்ததுமாம்,

(இ-ள்,)=இந்த நாமரூபப் பிரபஞ்சவிஷயங்களில் வருகின்றஆனந்தமும் பேரானந்தத்தினின்று உண்டாகிய அமிசமாம், (அஃதெங்ஙனமெனில்) (ஒரு வஸ்துவின்மேல்) இஷ்டம் பிறந்து கிடைக்கப்பெற்ற அந்தக்ஷணமே அவ் விஷயமுகமாய்ச் சுகவிருத்தியானது திரும்பித் தனது ஞானசுகத்தை க்ஷணநேரம் அனுபவிக்கும். அவ்விஷயமுகமேயாய் எப்போதும் விளங்குமிடத்துச் சர்வானந்த திருப்தியும் அனுபவித்ததுமாம்,=எ-று, (சுஉ)

விருத்தியொன்றுமில்லாமல் விளங்குநிலையேநாமதனில்
விருத்திதோன்றின்முன்பினின்றி விளங்குஞ்செகசீவபரங்கள்
விருத்திநீங்கின்முப்பொருளும் விளங்கிடாமற்றதனாலே
விருத்திதானேபந்தமதாம் விருத்தியொழிவேவீடாகும்,

(இ-ள்,)=ஒரு விருத்தியுமின்றிப் பிரகாசிக்கு நிலைமையே நமது சொரூபம், அச்சொரூபநிலையில் ஸ்புரணமுண்டாகில் முன்னும் பின்னுமில்லாமல் சீவேஸ்வரசகத்துக்கள் பிரகாசிக்கும், ஸ்புரணநீக்கினால் மூன்றுபொருள்களும் தோன்றாதனவாம்; அவ்வனுபவத்தினால் ஸ்புரணமேபெத்தமாம்.ஸ்புரணநீக்கமே முத்தியாகும்=எ-று,

நிருவிகற்பநமதிடத்தி னின்றுவிகற்பமுதித்தளவில்
ஒருமுப்பொருளுமுதித்துவிடு மொருங்கேமூலவிகற்பமதை
ஒருவினமதுநிலைதோன்று மொருமுப்பொருளுமதுவாகும்
குருவினருளினிந்நிலையைக் கூடவேண்டுநெறிநின்றே.

(இ-ள்)= நிர்விகற்பமாகிய நமது சொரூபத்தில் இருந்து விகற்பமானது உண்டானமாத்திரத்தில் ஒப்பற்ற சீவேஸ்வரசகத்துக்களும் உண்டாகிவிடும், அடியோடு காரணமானவிகற்பநினைவை ஒழித்தால் நமது சுபாவநிலையை பிரகாசிக்கும், ஒப்பற்ற அம்மூன்று பொருள்களும் அஃதாகவேவிளங்கும்ஞானாசிரியரது கிருபையினால் ஒழுங்கினின்று இந்தச் சொரூபநிலைமையை அடையவேண்டும்,=எ-று; (கூச)

ஏகபரத்திற்றோன் றுலகி லெங்கும்விடயமாதல்பரம்
ஏகவிடயமாதலுயி ரிந்தவுயிர்க்கேமுத்தியினி
ஏகவிடயமுதற்றள்ளி யெங்குமாகும்விடயமதும்
ஏகத்தள்ளிமற்றுலகு மிறக்கிற்பண்டைப்படிநிகழும்,

(இ-ள், =அத்வைதமாகியபிரமத்தில்தோற்றுகின்ற பிரபஞ்சத்தில் சமஷ்டிவிடயமாகின்றது ஈஸ்வரன் வியஷ்டிவிடயமாகின்றது சீவன். இச்சீவனுக்கேமோட்சம் இதன்மேல்வியஷ்டிவிஷயமாகியசீவனைமுன்புநீக்கிச் சமஷ்டிவிஷயமாகிய ஈசுவரனையும் போகவொழித்து ஜகத்தும் நசித்தால் முன்போலப்பிரகாசிக்கும்,=எ-று, (கூரு)

எங்கும்விடயமாம்பரத்துக் கிருளெக்காலுமிலையாகும்
தங்குமுயிர்க்கேமறதியுண்டாந் தன்னாற்றளவேகூடிடா
எங்கும்விடயமாம்பரமே யேகவிடயவுயிர்போலத்
தங்கிக்குருவாயெழுந்தருளித் தன்னுமுயிர்கண்மறதியெலாம்,

(இ-ள்,)=சமஷ்டிவிஷயமாகிய ஈஸ்வரனுக்கு அஞ்ஞானமறைப்பு எந்தக்காலத்திலும் இல்லையாகும் பொருந்திய சீவனுக்கே மறைப்புண்டாகும் இவ்வனுபவம்தனதுவலியினால்சேராதனவாம் சமஷ்டிவிஷயமாகின்ற ஈஸ்வரனே வியஷ்டி விஷயமாகிய சீவனைப் போல ஓர் வடிவுகொண்டு குருமுகூர்த்தமாய் எழுந்தருளிவந்து சீவர்களுடைய அஞ்ஞான மறைப்பெல்லாம் ஒழிப்பன்,=எ-று, (கூசு

மாயையதனில்மும்முதலும் வகுப்பாய்விளங்கியிடுமந்த
மாயைநீங்கிலொருமுதலாய் வகுப்பொன்றின்றிவிளங்கியிடும்
ஆயபிரமமென்றுளதோ வன்றேயில்லாமாயையுமுண்
டாயபிரமமுள்ளளவு மந்தமாயைக்கழிவில்லை.

(இ-ள்,)=மாயாவல்லபத்தினால்சீவேஸ்வரஜகத்துக்கள்மூன்றும்பிரிவாய்ப் பிரகாசிக்கும் அம்மாயையானது விசாரஞானத்தினால் நீக்கில்

பிரமமாத்திரமாய் ஒரு பிரிவு மில்லாமல் பிரகாசிக்கும் ஆகிய பிரமமெப்போ துண்டா யிருக்கின்றதோ அப்போதே காலத்திரயத்திலு மில்லாத மகாமாயையும் உள்ளது. ஆகிய பிரமமென்ப துள்ளபரியந்தமும் அம்மாயைக்கு நாசமில்லை,=எ-று, (௩௭)

இந்தமாயைக்கழிவிலதே லிந்தவுயிருக்கொருக்காலும்
அந்தமுத்தியில்லையென்னி லறையுமுயிர்கடமைமறந்த
பந்தநீக்கினக்கணமே பரமாய்விளங்குமதையன்றி
இந்தவில்லாமாயைக்கழிவி லதினிலைவீடெனல்கூடா.

(இ-ள்,)=இம்மாயைக்கு நாசமில்லையாகில் இச்சீவனுக்குஒருபோதும் அழகியமோட்சம் இல்லையென்றால், சொல்லுகின்ற சீவர்கள் தங்கள் சொரூபத்தை மறந்த மயக்கம் நசிக்கின் அந்தட்சணமே பிரமமாய்ப் பிரகாசிப்பார்கள். அதையொழிந்து இம்மாயைக்கு நாசமின்மையால் முத்தியின்றென்பது கூடாதனவாம்,=எ-று, (௩௮)

தன்னைமறைத்தபந்தமதைத் தள்ளிநீக்கிற்றான்விளங்கும்
தன்னைமறந்ததேபந்தந் தன்னையறிந்ததேமுத்தி
தன்னைவிடவேறொர்பொருளில்லை தானேபிரமமாயையும்பின்
தன்னைவிடவேறாய்விளங்கா தானேயாகிவிளங்கிவிடும்,

(இ-ள்,)=தற்சொரூபத்தை மறைத்தபந்தத்தை ஒழித்துப்பிரத்தியேகப்படில் தனதுசொரூபம் பிரகாசிக்கும்,தற்சொரூபத்தை மறந்துவிட்டதே பெத்தமாம். தற்சொரூபத்தைத் தெரிந்ததே மோட்சமாம், தற்சொருபத்தையன்றி ஓர்வஸ்துவில்லை, தானே பிரமசொரூபம்,மாயையென்பதும் தன்னையல்லாமல் அன்னியமாய்விளங்காது,தற்சொரூபமேயாகிப் பிரகாசிக்கும்,=எ-று, (௩௯)

தன்னையறியாவியற்கையினிற் சத்தேபோலவிளங்கிவிடும்
தன்னையறிந்தவுடனசத்தாய்த் தானேவிளங்குமிவ்வுலகம்
தன்னையறியுமளவுமிவை தன்னைவிடவேறில்லையெனவே
தன்னைநோக்கியிடினவையுந் தானாய்விளங்குமுடிவதனில்,

(இ-ள்,)=தற்சொரூபத்தை அறியாதசுபாவத்தில் உள்ளதுபோலப் பிரகாசிக்கும் தற்சொரூபத்தைஅறிந்தமாத்திரத்தில் இல்லாதாகத் தனக்குத்தானே இச்சீவேஸ்வரசகத்துக்கள் பிரகாசிக்கும், தற்சொரூபத்தைத்தெரியுமட்டும் இச்சீவேஸ்வரசகத்துக்கள் தற்சொருபத்தையன்றி அன்னியமன்றென்று தற்சொருபத்தையே பாவித்துவரில் அச்சீவேசுரசகத்துக்களும் தீர்ந்தநிலையில் தன்மயமாய்ப்பிரகாசிக்கும்.(

இல்லாமாயைதானிருந்தென் னிறந்தென்னவைபந்தமதாகா
இல்லாமாயைதனைமெய்யா யெண்ணுமதியேபந்தமதாம்
இல்லாமாயைதனைப்பொய்யா யெண்ணுமதியேமுத்தியதாம்
இல்லாமாயையில்லையென்றே யியல்பாய்த்தோன்றுந் தன்னிலையில்

(இ-ள்,)=மித்தையானமாயையானது இருந்தாலென்னநசித்தாலென்ன அம்மாயாதோற்றங்கள்பெத்தமாகாதுமித்தையான மாயையைச் சத்தியமாய்நினைக்கின்ற சித்தவிருத்தியேபெத்தமாகும். மித்தையான மாயையை அசத்தியமாய்நினைக்கின்ற சித்தவிருத்தியேமோட்சமாம் மித்தையானமாயையானது மித்தையென்றேதற்சொரூபானுபூதி நிலைமையில் இயற்கையாய்த்தோற்றும்,=எ-று. (எக)

நினைவேமூலமற்றதனி னின்றுவிரியுமும்முதலும்
நினைவைநீங்கிலவைமூன்று நினைவிலொடுங்குமதனாலே
நினைவேபந்தமினைவொழிவி னிலைமையானமுத்தியுமாம்
நினைவைநீங்கியனுதினமு நின்றநிலையேநின்றிடுக.

(இ-ள்,)=சங்கற்பமேகாரணம் அச்சங்கற்பத்தினின்று முப்பொருள்களும்விகற்பிக்கும்.சங்கற்பத்தைநீங்கினால் அம்முப்பொருள்களும் சங்கற்பத்தில்அடங்கும், அவ்வனுபவத்தால் சங்கற்பமே பெத்தம், சங்கற்பநாசத்தில் ஸ்திரமானமோட்சமுமாம். சங்கற்பத்தை நீங்கிச் சதாகாலமும் இருந்தபடியேஇருக்கக்கடவாய்,=எ-று. (எஉ)

நினைவுநீங்கிலுருநாம நீங்குமவையைத்தள்ளிடினும்
நினைவுநீங்குமற்றவையி னினக்கேதிச்சையதினின்று
நினைவுநீங்கிநின்றிடமே நிலைமையானமுத்தியென்னும்
நினைவுகொண்டந்நிலையை விட்டுநீங்காதென்றுநின்றிடுக.

(இ-ள்.)=சங்கற்பநசித்தால் நாமரூபங்கள் நசிக்கும்அவ்வுருநாமங்களைநசித்தாலும் சங்கற்பநசிக்கும் அவ்விருவகையில் உனக்கு எதுவிருப்பமோஅவ்வகையிலப்பியாசித்துச் சங்கற்பநாசஞ்செய்து இருந்தநிலையே ஸ்திரமானமோட்சமென்னும் எண்ணங்கொண்டு அவ்வனுபூதிநிலைமையை விட்டொழியாமல் எப்போதும் இருக்கக்கடவாய்,=

நினைவைநீக்கிநோக்கியிடி னிமலசொரூபந்தோன்றியிடும்
நினைவைமேவிநோக்கியிடி னிலையிலுலகந்தோன்றியிடும்
நினைவிலுலகமறிந்தனவு நீங்கிச்சொரூபமறிந்தனவும்
நினைவினொக்கிற்றுவிலில்லை நிகழுமாயாமோகமதில்

(இ-ள்,)=சங்கற்பத்தை நசித்துப்பார்க்கில் நிருமலமாகிய பிரமம் தோற்றும் சங்கற்பத்தைப்பொருந்திப்பார்க்கில் ஸ்திரமின்றிய சீவேஸ்வரசகத்துக்கள்தோற்றும். சங்கற்பத்தினல் உலகத்தைத் தெரிந்ததும் சங்கற்பநீங்கிப் பிரமஸ்வரூபத்தைத்தெரிந்ததும் கருத்திற்பார்க்கில் அஃதில்லையாம். மாயாமயக்கத்தினுல்தோற்றும்,=எ-று, (எச)

தனதுநிலையிற்றானிற்கச் சாற்றுமாயாமோகமதில்
தனதுவடிவைமறந்துயிர்போற் றங்கிநீங்கிற்றனிகமும்
தனதுவடிவுதோன்றளவுஞ் சத்தேபோலவிளங்கியிடும்
தனதுவடிவுதோன்றளவிற் றனேயசத்தாய்விளங்கியிடும்,

(இ-ள்,)=தற்சொருபநிலைமையில் தானிருந்தபடியிருக்க,சொல்லுகின்ற மாயாமயக்கத்தினுல் தற்சொருபத்தைமறந்துவிட்டுச் சீவனைப்போற்பொருந்திச் சொருபநீங்கினுல் உலகந்தோற்றும், தற்சொருபந்தோற்றுமட்டும் உள்ளதுபோற்காணப்படும்,தற்சொருபம்தோற்றியமாத்திரத்தில் தானகவேஇல்லாததாய்க்காணப்படும்,=எ-று, ()

கானனீருங்கயிற்றரவுங் கட்டையதனிற்கள்வனுமே
ஆனவவைதம்மதிட்டான மாகுமவைகடோன்றளவும்
ஆனவவைமெய்போற்றோன்று மதுபோற்சகமுமதிட்டானம்
ஆனசொருபந்தோன்றளவு மசத்தல்லாதுபோல்விளங்கும்,

(இ-ள்,)=கானற்சலமும் ரச்சுசர்ப்பமும் ஸ்தாணுவில் சோரனும் ஆகியவவைகள் தமது அதிஷ்டானமாகியபொருள்கள் தோற்றுமட்டும்ஆகியவவைகள் யதார்த்தம்போல்விளங்கும், அத்தன்மைபோல்பிரபஞ்சமும்அதிஷ்டானமாகியபிரமம் பிரகாசிக்குமட்டும் யதார்த்தம் போல்பிரகாசிக்கும்,=எ-று, (எரு)

அதிட்டானமதுதோன்றளவு மதுமெய்போலவிளங்கியிடும்
அதிட்டானமதுதோன்றியபின் னசத்தேயாகிவிளங்கியிடும்
அதிட்டானமதுதோன்றளவு மசத்தென்றெணியேநோக்ககற்றி
அதிட்டானமதாங்கனேநோக்கி லசத்தேயாகிவிளங்கியிடும,

(இ-ள்,)=அதிஷ்டானப்பொருள் தோற்றுமட்டும் அவ்வாரோபப்பொருள் யதார்த்தம்போல் பிரகாசிக்கும், அதிஷ்டானப் பொருள் தோற்றினபின்பு மித்தையாகிப்பிரகாசிக்கும் அதிஷ்டானப்பொருள் தோற்றுமட்டும் மித்தையென்றுபாவித்தே அத்திருஷ்டியைக்கெடுத்து அதிஷ்டானமாகிய தற்சொருபத்தைப்பார்க்கில் மித்தையாகிப் பிரகாசிக்கும்,=எ-று, (எஎ)

தன்னைச்சீவனெனத்திரிவாய்த் தானின்றுணர்தலஞ்ஞானம்
தன்னைப்பிரமமெனத்துணிவாய்த் தானின்றுணர்தலேஞானம்
முன்னைத்தொடர்ச்சிவிடயமது மூலவரவும்வாதனையும்
பின்னையொருங்கேயொழிந்துவிடும் பேணல்விடுதலவைவேண்டா.

(இ-ள்,)=தற்சொருபத்தைச்சிதாபாசனென்றுமாறுகத்தானறிவது அஞ்ஞானமாகும். தற்சொருபத்தைப் பிரமமென்று திடமாய்த்தானறிவதே ஞானமாகும்முற்பவத்தொடர்பாகிய விஷயமும் பிரகிருதிவரவும் வாசனையும் பின்பு அடியோடு ஒழிந்துபோம், கொள்ளல் நீக்கலாகிய அவ்விரண்டும்வேண்டுவதில்லை,=எ-று, (எஅ)

நிமலநெஞ்சையுடையோர்க்கு நிலத்திலாசானெழுந்தருளி
விமலதத்தொமசியெனவே விளம்பிலவணுக்கக்கணமே
மும்மலநீங்கிச்சிவம்விளங்கு மோகநெஞ்சையுடையோர்க்கு
மும்மலச்சார்வாம்வாதனையே மூடிமிகவுநிறைந்திடுமே.

(இ-ள்,)=சுத்தமனசை யுடையவர்களுக்குப்பூமியின்கண் ஆசிரியர் எழுந்தருளிவந்து பரிசுத்தமாகிய அதுநீயாகுயென்று உபதேசிக்கில் அந்தக்ஷணமேமலத்திரயநீங்கிப்பிரமம்பிரகாசிக்கும்; அசுத்தமனசை யுடையவர்களுக்கு மும்மலச்சார்பாகிய வாசனைமூடி மிகவுமதிகரிக்கும்;=எ-று. (எகூ)

எங்கேகிறுத்தினங்கிருக்கு மியல்பையுடையநெஞ்சுடையோர்க்
கிங்கோர்மயக்கங்களுமில்லை யிச்சையிறந்தநிலையாகின்
அங்கேயாசானெழுந்தருளி யதுநீயெனவேயுரைத்தவுடன்
அங்கேசொருபனாமெனவே யறுதியாகத்தோன்றியிடும்,

(இ-ள்,)=எந்தப்பாவனையில் நிறுத்தினாலும் அப்பாவனையிற்றானே நிலைத்திருக்குஞ் சுபாவமாகிய சுத்தமனதையுடைய முமுட்சுகளுக்கு இவ்விடத்தில் ஒரு பிராந்திகளும் இன்றாகும் நிராசையுடைய நிலைமையைப்பெற்றால் அவ்விடத்தில்ஆசிரியர்எழுந்தருளிவந்துதத்தொமென்று உபதேசித்தவளவில்அவ்விடத்தில் பிரமமேகூடஸ்தனென்று நிச்சயமாகப்பிரகாசிக்கும்,=எ-று, (அ௰)

ஒருவவேண்டுமனைத்துமென வுன்னவேண்டாம்வினைநீங்கில்
ஒருவுமனைத்தும்வினையுளதே லொன்றிமேவுமற்றவையும்
ஒருவல்பற்றலவையைவிடுத் துள்ளபடியேயுறுபுவினைச்
சொருபனாமேயெனத்திடமாய்த் தோற்றுமதற்கேற்றுமன்றிடு,

4

மையும் இருந்ததுபோலும் பிரமசொருபத்தில் பார்க்குமிடத்தில்இ ந்த ஜெகஜீவபரங்களாகிய விசித்திரத்திரயங்களும் பிரமமாய் ஏகமா ய்ச்சேர்ந்து விளங்கும்.=எ-று.. (அஅ)

எல்லாமாகுந்தற்சொருப மிருக்குமளவுமாயையுமுண்
டில்லாமாயையுள்ளளவு மீசன்புரியும்பஞ்சதொழில்
இல்லாதொழிந்துபோவதில்லை யிதனாற்சீவபரமுண்டு
சொல்லாநின்றவிவர்க்குக்கரி சொருபந்தானேபகுத்துநிற்கும்.

(இ-ள்,)=சர்வமுமாகின்ற பிரமசொருபம் இருக்குமட்டும் மாயை யுமுள்ளது. இல்லாதமாயை இருக்குமட்டும் ஈசுரன்செய்கின்ற பஞ் சகிருத்தியங்கள் இல்லாமல் நீங்கிப்போவதில்லை. இவ்வகையினால் சீ வபரங்களுண்டு. சொல்லுகின்ற இச் சீவேசுரர்களுக்குச் சாட்சியாகச் சொச்சொருபமே கூடஸ்தன் பிரமமெனப் பகுத்துப்பிரகாசித்து நி ற்கும்.=எ-று,, (அகூ)

பகுத்துநின்றதற்சொருபம் பரசீவருக்குச்சாட்சியதாய்ப்
பகுத்துநிற்குஞ்சாட்சியையே பார்த்துத்தத்தொமசியென்று
வகுத்துமாவாக்கியங்கூற மற்றிச்சீவன்றனையல்ல (தே
தொகுத்துக்கேட்டநிவனெனினுஞ் சொன்னதிவன்சாட்சியைப்பார்த்

(இ-ள்,)=பிரித்துநின்ற பிரமசொருபம் சீவேசுரர்களுக்குச் சாட்சி யாகப் பிரிந்துவிளங்கும். கூடஸ்தனையே ஆசிரியர்பார்த்து அது நீ யாநுயென்று பிரித்து மகாவாக்கியத்தை உபதேசிப்பர், இந்தச் சீவ னைப்பார்த்தல்ல அடுத்துக்கேட்டது இச்சீவ னென்றாலும் சீவசாட் சியாகிய கூடஸ்தனைப்பார்த்தே உபதேசித்ததாம்.=எ-று. (கூ0)

இந்தச்சீவன்கற்பிதமே யின்றிவேறோர்பொருளல்ல
அந்தச்சொருபமிவனாகா னந்தச்சாட்சியொன்றாகும்
இந்தச்சீவனதுநாமென் றெண்ணிச்சோகம்பாவிக்க
அந்தச்சொருபமாயிடுவ னவனேவிடவேறிவனிலதின்.

(இ-ள்,)=இச்சீவன் ஆரோபிதமேயன்றி வேறொருவஸ்துவல்ல அ ப்பிரமசொருபம் இச்சீவனுகான். அக்கூடஸ்தன் ஐக்கியமாவன், இச் சீவன் பிரமமே கூடஸ்தனென்று நினைந்து சோகம்பாவனைசெய்ய அ ப்பிரமசொருபமே தானவன். அப்பிரமத்தையன்றி அன்னியமாய்இ க் கூடஸ்தன் இல்லாமையால் (சீவேசுரர்களுக்க யிக்கமின்றெனவும்) பிரமகூடஸ்தருக்கே ஐக்கியமுண்டெனவுங்கூறினதாம்.=எ-று.(கூக)

இதனாற்பந்தமுத்தியுமுண் டிதனாற்பந்தமுத்தியுமின்
றிதனான்முத்திபெற்றவனுண் டிதனான்முத்திபெற்றவனின்

றிதனாற்பலவேயாகியிடு மிதனாலொன்றேயாகுமெனும்
இதனாலவிரோதமதாகு மிதுவேநமதுசித்தாந்தம்,

(இ-ள்,)=இவ்வகையால் பெத்த முத்திகளுமுண்டு இவ்வகையால் பெத்தமுத்திகளுமில்லை இவ்வகையால் முத்தியடைந்தவனுண்டு இவ்வகையால் முத்தியடைந்தவனில்லை இவ்வகையால் நானாவாகும் இவ்வகையால் ஏகமேயாகும் என்று உபநிஷத்துக்கள் சொல்லும் இவ்வகையால் விரோதமின்மையாம் இம்மார்க்கமே நமது நிச்சயமாம்,

இந்தநெறியிலனுதினமு மேகாந்தத்திலொருநினைவாய்ப்
பந்தமுத்திமார்க்கமதைப் பகுத்துவந்தவழிப்படியே
தொந்தமகற்றிப்பழையபடி சொருபமதனினின்றிடென்
இந்தவகையேயருள்புரிந்தா ளெனையாள்விருத்தவம்பிகையும்.

(இ-ள்,)=இம்மார்க்கத்தில் சதாகாலமும் ஏகாந்தஸ்தானத்திலிருந்து ஏகசித்தமாய் பெத்தமுத்தி வழிகளைப்பிரித்து உண்டானகிரமப்படியே தொடர்ச்சியையொழித்து முன்னிருந்ததுபோல் பிரமத்தில் நிற்பாயென்று இவ்விதமாக என்னை யடிமைகொண்டருளிய பெரியநாயகித்தாயாரும் கிருபைசெய்தருளினள்,=எ-று. (௯௩)

## அனுபவமகிழ்ச்சி.

கோர்த்துப்பத்துத்திசைகளினுங் குலவும்பதினாலுலகத்தும்
பார்த்துநோக்குமிடமெல்லாம் ப்ரமேநிற்கயானவமாய்க்
கூர்த்துநோக்கிப்பாராது கொடுமைகளிலேநாட்கழித்தேன்
ஈர்த்துவிருத்தவம்பிகைநின் றிங்தோவென்றாள்யான்கண்டேன்,

(இ-ள்,)=நிறைந்து பத்துத்திக்குகளிலும் பொருந்திய பதினான்குலோகத்திலும் பார்க்குமிடங்கடோறும் பிரமமேபிரகாசித்திருக்கநான்விருதாவாய்க் கூர்ந்து விசாரித்துப்பாராமல் தீமைகளில்வாணாளைக்கழித்தேன். பெரியநாயகியார் என்னை இழுத்து இதோபாரென்றனுக்கிரகஞ்செய்தனள் நான் கண்டறிந்தேன்,=எ-று. (௯௪)

கொக்குமிரைதேருதலெனருட் குருவினருளிலியானேக்கத்
திக்குலோகமென்றதெல்லாந் தெரியவேண்டியுரைத்ததுவாய்த்
திக்குலோகமும்மிறந்து தேருமியானுமிறந்ததுவாய்
ஒக்குமுவமையில்லாத வொளியாயெங்குநிறைந்ததுவே,

(இ-ள்,)=குரண்டமும்இரைதேடுவதுபோல்குருகிருபையினால்நான்பார்த்தவளவில் திசைகளுலகங்களென்னுஞ்சகலமுமறியவேண்டி உபதேசித்ததுபோலாகித்திசைகளுமுலகங்களுங்கரைந்து அறிகின்ற



உ

## இரண்டாவது

# விஞ்ஞானசாரம்.

### காப்பு.

### பாயிரம்.

### விநாயகர் துதி.

அஞ்சுகர முடைக் - குஞ்சரந்தனைத்
தஞ்சமென் றுநில் நெஞ்சமொன்றுமில்.

(இதன்பொருள்.)

பஞ்சசத்திகளையும் ஐங்கரங்களாகவுடைய யானைமுக விநாயகமூர்த்தியை அடைக்கலமென்று ததாகாரமாய் நிற்பாயாக. அங்ஙன நிற்பின் உனக்கு ஒருகுறையுமில்லை நெஞ்சமே என்றவாறு.

### வேறு-பெரியநாயகியார் துதி.

அமலபஞ்ச-கிருத்தியங்க ணடத்துமதற்காதாரமாகினாளை
விமலருளத்தகலாளை யெனையொர்பொருளாயாண்ட விஞ்சையாளை
நிமல்முதுகிரியிலமர் பெரியநாயகியையொருநிமலைதன்னை (தும்
மூமலவிருட்கிரவியையென் கண்மணியைப்பணிந்திடுவா மென்றுமே

(இ-ள்.)=பரிசுத்தமாகிய பஞ்ச கிருத்தியங்களை நடத்திவருவதற்கு ஆதாரமாயிருப்பவளும் மலரகிதமாகிய அடியார்களது இருதயகமலத்தினின்று நீங்காதவளும் என்னையு மொருபொருளாக வடிமைகொண்ட வித்தையுடையவளும் நிருமலமாகிய பழமலையி லெழுந்தருளியிருக்கின்ற விருத்தாம்பிகையும் ஒப்பற்ற சுத்த சொரூபமானவளும் ஆணவம்-மாயை-கன்மமென்னும் மும்மலவிருளுக்கு ஞானசூரியனும் எனது கண்மணியுமாகிய பெரியநாயகியம்மையாரைத் திரிகாலத்திலும் வணங்குவாம்.=எ-று. (க)

---

பஞ்சசத்திகளாவன. ஆதிசத்தி-பராசத்தி இச்சாசத்தி ஞானசத்தி-கிரியாசத்தி-என்பனவைகளாம்.

வேறு-இதுவுமது,

ஊனுயுழல்வேன்றனையாண்ட வுமையேபரையேயுயிர்க்குயிரே
தானுய்திகழுஞ்சுயவொளியே தாயேவிருத்தவம்பிகையே
ஞானனந்தரசம்விளக்கும் ஞானசாரமெனக்கருளி
நானுய்நீயேயென்னுடைய நாவினின்றுமுரைசெய்வாய்,

(இ-ள்,)=தேகாகாரமா யலைந்துதிரிகின்ற என்னையடிமைகொண்ட உமாதேவியே பராசத்தியே உயிர்க்குயிரா யிருப்பவளே தானேதானுய்ப்பிரகாசிக்குஞ் சுயம்பிரகாசமே தாயானவளே விருத்தாம்பிகையே அறிவானந்தாமிர்தத்தைப் பிரகாசிப்பிக்கும் ஞானமிர்தத்தை அடியேனுக் கனுக்கிரகஞ்செய்வதுமன்றி என்னுடைய நாவினிடத்தும் இருந்து நான்சொல்லியதுபோல விஞ்ஞானசாரமென்னும் நூலையும் நீயே சொல்லி முடிப்பாயாக,=எ-று, (க)

அருளுமுமையினடிபணிந்தே யஞ்ஞானத்தின்றிமிரகன்று
மருளுமயமுமில்லாத மாவீட்டின்பரசம்விளங்கச்
சுருதிநெறியிற்பிசகாது சொல்லார்த்தங்கடமையமைத்திவ்
வொருவிஞ்ஞானசாரமதை யுரைத்தேன்பரையினருளாலே.

(இ-ள்,)=சகல வுயிர்களுக்குங் கிருபைசெயயும் உமாதேவியாரது திருவடிகளைவணங்கி அஞ்ஞான விறைப்பு நீங்கி மருளாகிய மாம்சதேகமும் இருளாகிய அவித்தியாதேகமு மின்மையாகிய பெருமை தங்கிய மோட்சானந்தசாரம் பிரகாசிக்கும்படி வேதவொழுங்கிற்றவறுமல் சொற்களையும் பொருள்களையு மமைத்து இந்த வுயர்வாகிய விஞ்ஞானசாரமென்னும் நூலைப் பராபரையாகிய பெரியநாயகியாரது திருவருளால் சொல்லத்துணிந்தேன்,=எ-று. (உ)

பாயிர முற்றிற்று.

## நூல்,

முன்னுட்புரிந்ததவப்பயனுன் முதல்வனொருவனுளனென்றே
அன்னுன்பணியேமுத்திபத மடையக்கூட்டுமெனவெண்ணிப்
பின்னுசான்முன் * னுருமூன்றும் பேணியொழுங்கிற்சாதனங்கள்
மன்னுன்கினையுமுடையோனே வகுத்தவிந்நூற்குரியவனும்.

(இ-ள்,)=பலஜன்மாந்தரங்களிற் செய்துள்ள தபோபலத்தினுல் கர்த்தாவொருவ ரிருக்கிறுரென்றும் அப்படிப்பட்ட கர்த்தாவினதுதிரு

* உருமூன்ருவன குரு-லிங்க-ஜங்கமம்.

ப்பணிசெய்வதே மோட்சபதத்தையடையும்படி செய்விக்குமென்று ங்கருத்துண்டாகிப் பிறகு குருவடிவமுதலிய மூன்றுவடிவத்தையும் விரும்பி முறையாக வந்தனைவழிபாடுசெய்து அவ் விசேஷத்தினால் நிலைபெற்ற நான்கு சாதனங்களையும் இயற்கையிற் பெற்றுள்ளவனே சொல்லப்பட்ட இந்தநூலுக்குரிய அதிகாரியாம்,=எ-று, (௩)

சத்யாசத்யவத்துவினைத் தகவேபிரித்துத்தானறிதன்
மித்தையானபோகத்தின் விராகம்பெறுதல்சமையாதிக்
கொத்தானவைகளோராறுங் கொள்கைதனிலேபெற்றிடுதல்
அத்யான்மிகமுத்திதனி லபேட்சையாதலிவைநான்காம்.

(இ-ள்.)=நித்தியா நித்தியப்பொருள்களைத் தகுதியாகப் பகுத்தறித லும்மித்தியாசொரூபமாகிய இகபரபோகங்களில்நிராசைபிறத்தலும் * சமைமுதலிய ஷட்குணங்களும் இயற்கையாகவே யடைந்திருத்த லும் கூடஸ்தபிரமாயிக்கிய முத்தியில் விருப்புண்டாயிருத்தலுமா கிய இவைகளே சாதனசதுஷ்டயங்களாம்.=எ-று. (௪)

சித்தம்பிரகாசத்தையுறிற் சேருநான்குசாதனமும்
சத்திநிபாதந்தான்பிறக்கிற் சாருமொளிசித்தந்தனிலே
ஒத்துவினைகடன்ஞ்சபடி னுண்டாஞ்சத்திநிபாதமதும்
பத்திபுரியின்மூவடிவிற் பண்டார்வினைகள்சமமாகும்.

(இ-ள்,)=சித்தசுத்தி யுண்டாகுமானால் நான்குசாதனங்களு முண் டாகும் அருட்சத்தி பதிவுண்டாகுமானால் சித்தசுத்தி யுண்டாகும் இருவினைகளுமொத்து மலபரிபாக முண்டாகுமானால் அருட்சத்தி பதி வுண்டாகும். குருலிங்கஜங்கமபத்தி வழுவாமல் செய்துவரின் ப ழமையாய்வந்துள்ள இருவினைகளும் சமமாம்,=எ-று, (௫

விடயமதில்மோகியைப்போல விமலந்தானேமூவுருவாய்
அடையுமெனவேகண்டவுட னடிகள்பரவியன்பாகத்
தடைகளிலதுகாயமனந் தனமீந்திடிற்சார்ந்திடுகன்மம்
உடையுமலதுமற்றொன்று லுடையாதிதுவேயொழுங்காமால்.

(இ-ள். =சிற்றின்ப விஷயத்தில் மோகித்துள்ள விடனைப்போலப் பார்த்தமாத்திரத்தில் நிஷ்களமாகிய பரமசிவமே மூன்றுவடிவா யெ ழுந்தருளி வந்ததென்று திருவடிகளிற் சாஷ்டாங்கமாக வணங்கியெ

* சமைமுதலிய ஷட்குணங்களாவன-சமம்-தமம்-விடல்- சகித்தல்-சமாதானம்-சிரத்தை என்பனவாம்.

ழுந்து பூரணமனதாகத் தடைகளில்லாமல் * சரீரம்-மனம்-தனம்-ஆகியமூன்றையுந் தத்தஞ்செய்யில் அனாதியாய்ப்பொருந்தியுள்ள கன்மநீக்குமல்லாமல்மற்றொருவகையினாலு நீங்காது இதுவேமுறைமையாகும்=எ-று. (௭)

தந்தைதனதுசுதர்கையின்முன் றந்தபொருளைத்தானேபின்
சிந்தைமகிழ்ச்சியுடனிரக்குஞ் செய்திபோலமூவடிவாய்
வந்துசிவமேயிரப்பாக வாங்குந்தனதுமாயையினை
இந்தவகையையுணர்ந்தீயி னிரியும்வினைகளென்றறிவாய்.

(இ-ள்.)=பிதாவானவன் தன் பிள்ளைகளிடத்தில் முன்கொண்டுவந்துகொடுத்த சிற்றுண்டிமுதலிய பொருள்களைப் பிற்பாடு அந்தப்பிதாவே மனக்களிப்பாய்க் கெஞ்சிக்கேட்கு முறைமைபோலப் பரமசிவமே மூன்றுவடிவமாய்வந்து தாம் கொடுத்துள்ள மாயாகாரியமாகிய முப்பொருள்களையும்யாசிப்பாகஏற்றுக்கொள்ளும் இந்தக்கிரமத்தையறிந்து தத்தஞ்செய்யின் இருவினைகளும் நீங்குமென்றறிவாயாக,=எ

மூன்றுவடிவாய்மும்மலத்தை மூன்றுபங்காய்த்தான்கொண்டு
மூன்றுங்கெடுத்துநமதுடைய மூன்றுபொருளும்பங்காக்கி
மூன்றுவடிவுங்கைக்கொளவே மூன்றுமுதலுமானசத்தே
மூன்றுவடிவாமெனப்பொருள்கண் மூன்றுமீந்தேபணிபுரிக.

(இ-ள்,)=மூன்றுருவமாய்வந்து ஆணவம்-மாயை- கன்மமென்னும் மூன்றுமலத்தையும் மூன்றுபாகமா யேற்றுக்கொண்டு அம்மூன்றுமலத்தையுங்கெடுத்து நமது மூன்று பொருளையும் பாகப்படுத்தி மூன்றுவடிவுங் கைக்கொள்ளும்பொருட்டு மும்மூர்த்திசொரூபமாகிய சிவமே இந்தமூன்றுருவமா யெழுந்தருளிவந்ததென்று மூன்றுபொருள்களையுந் தத்தஞ்செய்து * சதுஷ்பாத பணிவிடைகளைச் செய்யக்கடவாய்=எ-று, (௮)

இந்தத்திறனிற்பணிவிடைக ளியற்றிவினைகள்சமமாகில்
அந்தத்தடங்களொத்துநிற்கு மந்தத்தராசினுவேபோல்
புந்திக்கிலேசமேயின்றிப் போதஞ்செவிதாம்வினைகள்கெடும்
சந்திப்பதுவாமப்பொழுதே சத்திநிபாதந்தான்பிறக்கும்.

---

* சரீரம்-மனம்-ஆகிய மூன்றையுந்தத்தஞ்செய்தலாவது அவற்றிலுள்ள வாசனையெனக்கொள்க.

* சதுஷ்பாதபணிவிடைகளாவன-ஆப்த-அங்க-ஸ்தான-சற்பாவமென்பனவாம்.

(இ-ள்,)=இந்தவகையினுற் பணிவிடைகள் செய்து இருவினையொப்புவருமாகில் அழகிய இரண்டுதட்டுகளும் ஒத்திருக்கின்ற அந்தத் தராசினுனிபோலப் புத்திசலனமில்லாமல் அறிவு நேரேவிளங்கும் இருவினைகளும் நாசமாம் சந்திப்பதாகிய அக்கணமே சத்திநிபாதமாகிய வருட்சத்தி பதிவுண்டாகும்-=எ-று, (௯)

சத்திநிபாதந்தான்பிறந்து சாற்றுமந்தக்கரணங்கள்
சுத்தியதாகினவ்விடத்திற் றேன்றுநான்குசாதனமும்
எத்திற்றானும்வேறொன்று லெய்தாதெய்திற்றாயினும்பின்
குத்திரமாகிப்போமெனவே கொள்ளார்மேலோரீதன்றி.

(இ-ள்,)=அருட்சத்தி பதிவுண்டாகிச் சொல்லப்பட்ட சித்தசுத்தியுண்டாகுமானுல் அந்தவிடத்தில் நான்குசாதனமுமுண்டாகும் இந்தவகையினுலல்லாமல் எதினுலும் வேறொருவகையினு லுண்டாகாது. உண்டாயினும் பின்பு சிலபொழுதில் கபடமாய் நீங்கிவிடுமென்று பெரியோர்கள் அங்கீகரியார்கள்,=எ-று. (௰)

சத்தியாசத்யவத்துவினைத் தகவேபிரித்துத்தானறியில்
கொத்தாய்மற்றையொருமூன்றுங் கூடவுடன்வந்தணையுறும்
அத்தாலதுநீயென்றுரைக்கு மமலவாக்கியப்படியே
ஒத்தாற்பிரமந்தானுயே யுணருங்குருவினருளாலே.

(இ-ள்,)=ஒருவன் நித்தியாநித்தியப்பொருள்களைப் பகுத்தறிவானுகில் அவனிடத்தில் ஏனைய மூன்றுசாதனங்களும் ஒரேகாலத்தில்வந்து பொருந்தும் அதனுல் அதுநீயென்று கூறப்படும் பரிசுத்தமாகிய மகாவாக்கியப்படி ஒத்திருந் தனுஷ்டிப்பானுகில்குருகடாட்சத்தினுல் பிரமந் தானுகவேயறிந்து பிரகாசிப்பான்.=எ-று. (௰௧)

இந்தநான்குசாதனமு மில்லாதவர்கட்கொருக்காலும்
அந்தஞானம்வெளியாகா தங்கிநயனத்தொடுதோன்றிப்
பந்தமறவேயுரைத்திடினும் பாழுக்கிறைத்தநீரொக்கும்
முந்தநான்குசாதனமு முத்தியடைவோர்க்குறவேண்டும்;

(இ-ள்,)=இந்த நான்கு சாதனங்களும் இல்லாதவர்களுக்கு அந்த ஞானம் ஒருகாலத்திலும் பிரகாசிக்கமாட்டாது பரமசிவன் அக்கினி நேத்திரத்தோடு தோற்றப்பட்டு இவனது பாசபந்தமனைத்தும் நீங்கும்படி உபதேசித்தபோதும் பாழுக்கிறைத்தநீருக்குச் சமானமாகும் ஆகலால் முத்திவிருப்பமுடையவர்களுக்கு முதலில் நான்குசாதனமும் இயல்பாகவே யிருக்கவேண்டும்,=எ-று. (௰௨)

பண்டைத்தலத்தையுழவாளர் பண்டிமுகத்திற்கொழுப்பிணிக்கின்
மண்டித்தடையற்றுழுமஃதின் மயக்கமுடையோர்க்கறிவருளின்
மிண்டிப்பயமுமறமும்விட்டு வேண்டும்படியேசரிக்குமெனக்
கண்டித்திறத்தோர்க்குபதேசங் கழலார்ஞானசற்குருவே,

(இ-ள்,)=உழவினர் உழுமாட்டின்கழுத்தில் கலப்பையைப்பூட்டிக் கரம்புநிலத்தில் விட்டுவிட்டால் அந்நிலத்திற் சென்று தடையில்லாமல் உழுகின்றும் அதுபோல சஞ்சல புத்தியை யுடையவர்களுக்கு ஞானசாரத்தையுபதேசிக்கின் விடயங்களிற்சென்று பயத்தையும் தருமத்தையும்விட்டு மனோபீஷ்டப்படி நடப்பார்களென்று தெரிந்து இவ்வகைப்பட்ட அபக்குவர்களுக்கு ஞானாசிரியர் உபதேசஞ் செய்யார்.=எ-று. (௰௩)

இந்நேர்நெறியிற்சாதனங்க ளிவைநான்கினும்வந்தெய்தியதேல்
தன்னேர்குரவன்றனையடைந்து சாற்றுஞ்சீடாசாரமுறை
அந்நேர்பிசகாதேவல்புரிந் தருடன்மீதிற்சுரப்பளவும்
பின்னேதிரிந்துமவன்கொடுக்கப் பெறவேவேண்டும்விஞ்ஞானம்.

(இ-ள்,)=இந்தநேராகியமார்க்கமாய் ஒருவனிடத்தில் சாதனசதுஷ்டயங்கள்வந்து பொருந்துமாகில் அவன் தனக்குத்தானேஒப்பாய்ப்பிரகாசிக்கின்ற ஞானாசிரியனையடுத்து சீடாசாரமுறைதவறுமல் பணிவிடைசெய்தும் தன்மேலவரது திருவருளுண்டாகுமளவும் இடைவிடாமல் அவர்பிறகே சாயைபோற் றிரிந்தும் அவரே திருவருள்சுரந்துபதேசிக்குங்காலத்தில் சிரேஷ்டமாகிய ஞானத்தைப்பெற்றுக்கொள்ளவேண்டும்.=எ-று. (௰௪)

ஞானமார்க்கமிருவகையாய் நவில்வர் * விகங்கம்பிபீலிகையென்
றனவவையில்விகங்கமே யமலவேதமுடிவதனின்
ஞானமாகும்பிபீலிகையே நவிறந்திரத்தின்ஞானமாம்
ஆனவிகங்கத்துணரார்மற் றதனின்வழியேயுணர்ந்திடுவார்.

(இ-ள்,)=இந்தஞானமார்க்கத்தை விகங்கபட்சமென்றும் பிபீலிகாபட்சமென்று மிரண்டுவகையாகப் பெரியோர்கள்சொல்வார்கள்-அவற்றுள் விகங்கபட்சமே நிருமலமான வேதமுடிவிற்கூறப்படும் உண்மையாகிய மகாவாக்கிய ஞானமாகும், பிபீலிகாபட்சமே பக்குவமறிந்துகூறப்படும் உபாயஞானமாகும் ஆகையால் உண்மையாகிய விகங்கபட்சஞானத்தை யனுசரிக்கச் சக்தியில்லாதவர்கள் அந்தப் பிபீலிகாமார்க்கத்தை யறிந்து அப்பியாசிப்பார்கள்.=எ-று. (௰௫)

* விகங்கம்-பட்சி * பிபீலிகை-எறும்பு,

ஆசான்மாணாக்கனுடைய வதிகாரங்களவைபார்த்தே
பேசாநிற்கும்விகங்கமதைப் பிரமமொன்றுமேமெய்யாய்
மாசாருலகம்பொய்யாக மாணாக்கன்றனனுபவத்தில்
தேசாய்விளங்கியக்கணமே சிரத்தைபிறந்துதிடமாக.

(இ-ள்,)=ஆசிரியர்சீடனது பக்குவங்களைத்தெரிந்துவிகங்கபட்சமாகிய மகாவாக்கியத்தை யுபதேசிப்பர் அங்ஙன முபதேசித்தமாத்திரத்தில் பிரமமொன்றே யுண்மையாகவும் குற்றநிறைந்த வுலகமுழுவதும் மித்தையாகவும் சீடனனுபவத்திற் சொச்சொரூபமாகப் பிரகாசித்து அந்தட்சணத்திலேயே திடமாகச்சிரத்தையுண்டாகி.=எ-று,(௰௬)

தோன்றுமுலகமெய்யாகிற் றோன்றுமதிலேவிடயங்கள்
தோன்றுமந்தவிடயமதைத் தோன்றவறியவைம்பூதம்
தோன்றுமிந்திரியந்தோன்றுந் தோன்றுமந்தக்கரணங்கள்
தோன்றும்புருடன்காலபரந் தோன்றும்வியோமம் பரந்தோன்றும்

(இ-ள்,)=தோற்றப்படுகிற வுலகமுண்மையாகில் அதனிடத்தில் சத்தமுதலிய பஞ்சவிடயங்கள் தோற்றப்படும் அந்தவிடயங்களையறியும்படி பஞ்சபூதங்களும் ஞானேந்திரியபஞ்சகமும் உள்ளமுதல் அகங்காரமீறாகிய அந்தக்கரண பஞ்சகமும் புருடன்-காலபரம்- வியோமம்-பரம்-என்னும் நான்கு தத்துவங்களும் ஆகிய இருபத்துநான்குந் தோற்றப்படும்,=எ-று. (௰௭)

உலகமெதினின் றுதித்திடுமென் றுன்னிநோக்கினினைவதனில்
இலகவுதிக்குமெனநினைவு மெதினின்றுதிக்குமெனநோக்கில்
திலகவறிவுதனிலென்றே சேரவனைத்துமறிவானல்
கலகமிந்தத்துவமெல்லாங் கலங்காவறிவாயேகரையும்,

(இ-ள்,) உலகமானது எதினிடத்திலிருந்து தோற்றப்படுகிறதென்று நினைந்துபார்க்கில் நினைவி லுதிக்கிறதாகத்தோற்றும் நினைவும் எதிலிருந்து பிறக்கிறதென்று பார்க்கில் உயர்வாகிய அறிவி லுதிக்கிறதாகவிளங்கும் அங்ஙனே அனைத்துமறிவாகப் பிரகாசிக்குமாயின் பலவாகிய கலகமிகுந்த தத்துவமுழுதுங் கலங்கி அறிவு சொரூபமாகவே கரைந்துவிடும்,=எ-று. (௰௮)

உலகமிலக்கும்வகையுண்டா யுதித்தின்பமதாயுருநாமத்
திலகவிளங்குமிவையைந்தி லியம்புமுன்மூன்றங்கிசமும்
குலவுசொரூபசம்பந்தங் கூறும்பினிரண்டங்கிசமும்
கலகமாயாசம்பந்தங் கருதிநோக்கிற்கற்பிதமே,

(இ-ள்,)=உலகமானது பிரகாசிக்கும்படி-சத்து-சித்து-ஆனந்தமாய் நாமரூபாத்மகமாகப் பிரகாசிக்கும் இந்த ஐந்து பொருள்களில் சொல்லப்படு முதன்மையாகிய மூன்றம்சமும் பிரகாசிக்கின்ற சொரூபசம்பந்தமும் பின்னாகிய இரண்டம்சமும் கலகஞ்செய்யு மாயாசம்பந்தமுமாகும் இதை நினைத்துப்பார்க்குமிடத்தில் கற்பனையேயாம்,=எ-

மூன்றங்கிசமுமதிட்டான மொழியும்பினிரண்டங்கிசமும்
ஆன்றவதிலாரோபிதமா மதனாற்சொரூபங்காரணமாய்த்
தோன்றுமுலகுமசத்தாகுஞ் சொருபமொன்றேசத்தாகும்
ஊன்றிநோக்கிலெக்காலு முளதேதோன்றுமிலதிலதே.

(இ-ள்,)=மூன்றம்சமும் அதிஷ்டானமாகும் சொல்லுகின்ற பின்னாகிய இரண்டம்சமும் மேலாகிய வதனிடத்திற் றோற்றப்படும் ஆரோபமாகும். அந்தவகையினால் பிரமங் காரணமாகக்காரியப்படு முலகமும் அசத்தாகும் பிரமமொன்றுமே சத்தாகும் உற்றுப்பார்க்குமிடத்தில் எந்தக்காலத்திலும் உள்ளதே தோற்றப்படும் இல்லாதது இல்லாததேயாகும்,=எ-று. (உஸ)

நாமரூபந்தனைமெய்யாய் நாடுமிடத்தின்முப்பொருளாம்
நாமரூபந்தனைப்பொய்யாய் நாடுமிடத்திலொருபொருளாம்
நாமரூபந்தனைமெய்யாய் நாடிற்சிவனவனேயாம்
நாமரூபந்தனைப்பொய்யாய் நாடிற்பிரமமவனேயாம்.

(இ-ள்,)=நாமரூபங்களை யதார்த்தமாகப்பார்க்குமிடத்தில் ஜகஜீவபரமாகிய முப்பொருளாகத்தோற்றும் நாமரூபங்களை மித்தையாகப் பார்க்குமிடத்தில் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய பிரமமாத்திரமாகவே பிரகாசிக்கும் நாமரூபங்களை யுண்மையாகப்பார்க்கின்றவனே ஜீவனாவான் நாமரூபங்களை மித்தையாகப்பார்க்கின்றவனே பிரமமாவான்,()

ஆடியதனிற்றோன்றுநிழ லதுபோல்விகற்பந்தீர்ந்தறிவில்
கோடிவிவிதசகந்தோன்றுங் கொளுங்காரணகாரியமின்றி
நாடிவேறுபோற்பாய்த ஞகமதத்தாற்றன்னிழலை
ஓடிப்பாயுமதுபோலென் றுரைப்பர்பிரமவாதிகளே.

(இ-ள்,)=கண்ணாடியிற் றோற்றப்படுகிற பிரதிவிம்பம்போல நிர்விகற்பமாகிய பிரமத்தில் விவர்த்தமாய்க் காரணகாரியமில்லாமல் நானாவித ஜெகத்துத்தோற்றப்படும் அதைத் தனக்கன்னியமாகக்கண்டு விவகரித்தல் யானையானது மதகாலத்திலுல் தனது நிழலை வேறுயானை

யென்று ஓடிப் பாய்வதுபோலாகுமென்று பிரமவாதிகள் சொல்லு வார்கள்.=எ-று. (உஉ)

ஒருவிகற்பங்களுமில்லா வொன்றும்பிரமமதினின்றே
ஒருவிகற்பநினைவாலே யுலகுசீவபரமாகும்
ஒருவினினைவைமுப்பொருளு மொடுக்குமதுவேமுப்பாழாம்
ஒருவிகற்பநினைவதனுக் குதிக்கவொடுங்கவிடமதுவே.

(இ-ள்,)=நிர்விகற்பமாகிப் பிரகாசிக்கின்ற ஏகமாகிய பிரமத்தில்நி ன்று விஸ்மரணமாகிய ஒருநினைவினால் ஜீவேஸ்வரஜகத்துண்டாகும் அந்தநினைவை நிராகரித்தால் மேற்சொல்லிய திரிபதார்த்தமுமொ டுங்கிப்போம் அங்ஙன மொடுங்குநிலையே முப்பாழாகும் அந்தவிகற் பநினைவுக்கு உற்பத்தி லயஸ்தானம் பிரமமேயாம்,=எ-று. (உங)

தனதுமாயைதன்னாலே தனையேயனேகமாய்க்காணும்
தனதுஞானந்தன்னாலே தனையேயேகமாய்க்காணும்
தனதுசத்தியிவையிரண்டுஞ் சத்திமானுந்தனையன்றி
தனதுசத்திவேறாகா ததனாற்றானேதானிகழும்.

(இ-ள்,)=தன்னது மாயாசத்தியினால் தன்னையே பலவாகப்பார்ப்ப ன் தன்னதுஞானசத்தியினால் தன்னைஒன்றாகப்பார்ப்பன் இவ்விரண் டுதன்மையுந் தனது சத்தியேயாகும் சத்திமானாகிய தன்னையல்லாமல் தன்னுடைய சத்திவேறாகாது அந்தவகையினால் தானேதானாகப் பிர காசிப்பன்.=எ-று. (உச)

என்றுநிலையிலொருபடியா யிருந்துதனையேகண்டிருக்கச்
சென்றுநினைவிற்பரசீவ செகமாய்விரியுமுன்னிலையில்
நின்றுநினைவைத்தானடுக்கி னேரேமூன்றுஞ்சென்றொடுங்கு
மென்றுகண்டோன்மூன்றும்பா ழிறந்தசொருபமேயன்றோ.

(இ-ள்,)=எக்காலத்திலும் தனதுஞானநிலையில் ஓரேபிரகாரமாயி ருந்து தன்னையேகண்டு சுகித்துக்கொண்டிருக்க அதினின்றுநீங்கி வி ஸ்மரணையின் வழியிற்சென்றால்முன்னிலையில்ஜீவேஸ்வரஜகத்தாய்ப் பரந்துநிற்கும் தனது சுயநிலையில்நின்று அந்த நினைவை யடக்கினால் அந்த மூன்றுபொருளும் நேரே யொடுங்கிவிடுமென்று அநுபவமா ய்க்கண்ட புருஷன் சிவசுழுத்தி நீங்கிய குரு துரிய சொருபமல்ல வோ.=எ-று. (உரு)

அடியுமுடியுருவுமிலா வகண்டவொளியாமொருதனையே
கடியதினைவாமாயையினாற் கலங்கிவேறுயனேகமாய்ப்
படிகமலையிற்சுணங்களைப்போற் பார்த்திலனைவேயதிட்டான
முடிவிறன்னைத்தான்கண்டே மோகமின்றிப்பார்த்திருப்பர்,

(இ-ள்,)=ஆதிமத்தியாந்தரகிதமாய் அகண்டப்பிரகாசமாய் விளங்குகின்ற தற்சொருபத்தை விஸ்மரணையாகிய மகாமாயையாற் கலங்கி வேறாகவும் பலவாகவும் ஸ்படிகமலையிடத்துள்ள சுவானத்தைப்போற் பார்ப்பதாமெனத்தள்ளி அதிஷ்டான்முடிவில் விளங்குகின்ற தன்னைத்தானாகவேகண்டு மயக்கமின்றிப் பார்த்திருப்பார்கள்,=எ-று. ()

இந்தநெறியிலுணராதார்க் கியம்பும்பிபீலிகையினெறி
வந்தவழிக்கும்போம்வழிக்கும் வாதமின்றியொழுங்காகப்
பந்தமனைவையுநியதிகொடு பார்த்தேயொன்றொன்றுயகற்றி
எந்தப்பொருணின்றதைக்கண்டே யெல்லாமதுவாயுணர்ந்திடுக,

(இ-ள்,)=இந்தவிகங்கமார்க்கத்திலறிந்துகொள்ளத்திடமில்லாதவர்கள்கிரித்தம் பிபீலிகாமார்க்கத்தையும் வேதத்திற்சொல்லப்படும்வந்தமார்க்கத்துக்கும் போகுமார்க்கத்துக்கும் தர்க்கஞ்செய்யாமல் குருவாக்கியமுறையாகப் பாசபந்தங்களை நேதிநேதிவாக்கியங் கொண்டு பார்த்து ஒவ்வொன்றாகக்கழித்து முடிவி லெந்தப்பொருள் கழிக்கப் படாமனின்றதோ அதைப்பார்த்து கழிந்தபொருளனைத்தும் அது வாகவே அறிந்துகொள்வாயாக,=எ-று. (௨௭)

வந்தவாறுநெறியுரைக்கின் மாயைதோன்றும்பிரமத்தில்
அந்தமாயைதனீச னகிலவிடயமாய்நிகழும்
இந்தவான்மாமற்றவையி லேகதேசவிடயமாம்
வந்தவாறேயொடுக்கிவிடில் வயங்கும்பிரமமேயென்றும்,

(இ-ள்,)=வந்தவழியை முறையாகச் சொல்லுமிடத்து பிரமத்தில் மாயையுண்டாகும் அந்தமாயையில் ஈஸ்வரன்சமஷ்டிசொருபமாகப் பிரகாசிப்பர் இந்தச்சீவாத்மாவானவன் அந்தச்சமஷ்டிசொருபத்தில் வியஷ்டிசொருபமாயிருப்பன் வந்தவகையாகவேஅபவாதயுத்தியினாலொடுக்கிப்பார்க்கின் காலத்திரயத்திலும்பிரமமாத்திரமேவிளங்கும்.

அந்தப்பிரமந்தனினின்றே யநிர்வாச்சியமாம்பினைதோன்றும்
அந்தப்பினையின்மாயைவரு மதனிற்பரதத்துவமதனில்
வந்தப்படியேவியோமமதில் வருங்காலபாமநினின்றே
தொந்தப்புருடன்புருடனிலே தோன்றும்பகுதிபகுதியின்மான்,

(இ-ள்,)=அந்தப்பிரமத்திலிருந்து கூறப்படாததாகிய பின்னையுண்டாகும் அந்தப்பின்னையிலிருந்து மாயையுண்டாகும் அதிலிருந்து பரதத்துவமும் அதிலிருந்து வியோகமும் அதிலிருந்து காலபரமும் அதிலிருந்து புருடனும் அதிலிருந்து பகுதியும் அதிலிருந்து பிரகிருதியும் உண்டாகும்,=எ-று. (உகூ)

மதியினகங்காரந்தோன்றி வகுத்தமூன்றுகுணமாகும்
அதிசாத்துவிதகுணத்தி லாகும்மனஞானேந்திரியம்
விதியாமிராசதகுணத்தில் வெளியாங்கருமவிந்திரியம்
ஒதியதமசுகுணத்தினு லுண்டாந்தன்மாத்திரையைந்தும்,

(இ-ள்,)=பிரகிருதியிலிருந்து அகங்கார முண்டாகி அதனிடத்துக் குணத்திரயங்களுண்டாகும் மேன்மையாகிய சத்துவகுணத்தில்மனமும் ஞானேந்திரியமு முண்டாகும் முறைமையாகிய இராசதகுணத்தில் கன்மேந்திரியமுண்டாகும் சொல்லப்பட்ட தாமதகுணத்திற்பஞ்சதன்மாத்திரைகளுமுண்டாம்,=எ-று. (௩0)

அவையைப்பஞ்சீகரிக்குமிடத் தாகுமைந்துமாபூதம்
இவைகளிருபத்தெட்டுமுட னியம்புமாயைபின்னையுமே
கவைசெய்முப்பதாகுமிவை கண்டபடியேதானெழுங்கில்
சிவையினருளானியதிபணிற் சேரும்பிரமந்தானகை,

(இ-ள்,)=அந்தத்தன்மாத்திரைகளைப் பஞ்சீகரணஞ்செய்யுமிடத்து ஐந்து ஸ்தூலபூதங்கள்தோன்றும் இந்தத் தத்துவங்களிருபத்தெட்டோடு முற்சொல்லியமாயையும் பின்னையுஞ்சேர்ந்து விரிவாக்குகின்றமுப்பதுதத்துவங்களாகும் இவற்றை அத்தியாரோபயுத்தியினற்பார்த்தபிரகாசமே சிவையாகிய பெரியநாயகியாரது திருவருளால் அபவாதயுத்தியைக்கொண்டு நியதிசெய்யில் பிரமந் தானகவே பிரகாசிப்பன்,=எ-று. (௩௧)

முப்பதினையுநீக்கிநிற்க மொழியுமவத்தைபத்தாகச்
செப்புநனவுகனவினுடன் சிவசுழுத்திபாநனவு
வெப்பமகன்றபரகனவு வியோமஞ்சிவசாக்கிரங்கனவு
ஒப்புமிலதுமூன்றும்பா மூண்மையானகுருவொன்றே,

(இ-ள்,)=முப்பதுதத்துவங்களையும் வேறுபடுத்திநிற்கும்படி பெரியோர்கள் சிவசாக்கிரம் சிவசொப்பனம் சிவசுழுத்தி பரசாக்கிரம் உஷ்ணமின்றிய பரசொப்பனம் பரசுழுத்தி சிவசாக்கிரம் சிவசொப்பனம் ஒருவமையுமில்லாத சிவசுழுத்தி உண்மையாகிய குருதுரியம் அதிபக சாவல்லதாராகச் சொல்லுவார்கள்,=எ-று. (௩௨)

மேலது.

நனவதனில்விசுவன்கனவினிற்றைசதனும்
நண்ணரியசுழுத்தியினிற்பிராஞ்ஞன்பரநனவில்
கனவிராட்டன்கனவிலிரணியகெர்ப்பனுமாங்
கருதரியபரப்பாழிலவ்வியாகிருதன்
உனவரியசிவநனவிற்சிற்சொலிதைவிசுவம்
ஒடுக்கியிடுஞ்சிவகனவிற்பிரசாபத்தியனும்
வினவரியபின்னையினிற் பொற்புவிசாந்தனுமாய்
விளம்பிடுவரபிமானியவத்தையொன்பதினுமே,

(இ-ள்,)=சீவசாக்கிரத்தில் விசுவனும் சீவசொப்பனத்தில் தைசதனும் அடைதற்கரியசீவசுழுத்தியில் பிராஞ்ஞனும் பரசாக்கிரத்தில் மேன்மையுடைய விராட்டும் பரசொப்பனத்தில் இரணியகர்ப்பனும் நினைத்தற்கரிய பரசுழுத்தியில் அவ்வியாகிருதனும் உன்னுதற்கரிய சிவசாக்கிரத்தில் சிற்சொலிதையும் விசுவக்கிராசமென்னும் சிவசொப்பனத்தில் பிரசாபத்தியனும் உசாவப்படாத பின்னையாகியசிவசுழுத்தியில் பொற்புவிசாந்தனுமென்று இந்தவொன்பது அவஸ்தைகட்கும் அபிமானிநாமங்கள் பெரியோர்கள்சொல்லுவார்கள்,=எ-று. (௩௩)

நனவதனிற்பூதஞ்சூக்குமபூதமறியும்
ஞானவிந்தியங்கன்மவிந்திரியமிவைகள்
கனவதனின்மனமதிமற்றகங்காரமூன்று
கருத்தொடுங்குஞ்சுழுத்தியினிற்பகுதிபரநனவில்
அனபுருடன்பரகனவிற்காலபரம்வியோமம்
அதீதமதிற்சிவநனவிற்பரதத்துவமந்தக்
கனவதனின்மாயையுபசாந்தமதிற்பின்னை
கண்டிவ்வொழுங்கினிலகற்றிற்காணுமந்தவீடே,

(இ-ள்,)=சீவசாக்கிரத்தில் தூலபூதஞ் சூட்சுமபூதம் ஞானேந்திரியம் கன்மேந்திரியமென்னு மிருபது தத்துவங்களும் சீவசொப்பனத்தில் மனம் புத்தி அகங்காரமென்னு மூன்றுதத்துவங்களும் மனமடங்குஞ் சீவசுழுத்தியில் பிரகிருதிதத்துவமும் பரசாக்கிரத்தில்புருடதத்துவமும் பரசொப்பனத்தில் காலபரதத்துவமும் பரசுழுத்தியில் வியோமதத்துவமும் சிவசாக்கிரத்தில் பரதத்துவமும் சிவசொப்பனத்தில் மாயையும் உபசாந்தமாகிய சிவசுழுத்தியில் பின்னையும் ஆகுமென்று முறையாகக்கண்டு நியதிசெய்யில் அந்த மோட்சவீடானது பிரகாசிக்கும்,=எ-று. (௩௪)

வேறு-

பிண்டந்தானுய்நின்றறிவைப் பிறிக்கிலந்தவனுபவத்தில்
அண்டந்தானுய்நின்றிடுமற் றந்தவறிவைத்தான்பிறிக்கில்
கண்டவிவைகட்குட்புறம்பாய்க் கலங்காவறிவாய்நிகழுமிதை (ம்
உண்டபொழுதேபொனிற்பணிகளொன்றும்போற்சித்தொன்றேயா

(இ-ள்.)=தான் பிண்டவறிவாயிருந்து அண்டவறிவைப் பிறித்துப் பார்க்கில் அவ்வனுபவத்தில் அண்டவறிவே தானுகப் பிரகாசிப்பன் அந்தவண்டவறிவைப் பிறிக்குமிடத்தில் காணப்பட்ட இவைகட்குஉள்ளும்புறம்புமாய் ஒரே பிரகாரமாய்க் கலங்காத அறிவுசொரூபமாய்ப் பிரகாசிக்கும் இதைப்பூரணமாய் விசுவக்கிராசஞ் செய்தபொழுதே பலநாமரூபங்களாகின்ற ஆபரணங்கள் தங்கத்தில் ஏகாகாரமாய் விளங்குவதுபோல் ஒன்றுகிய சித்துமாத்திரமே விளங்கும்,=எ-று,

பூதநீங்கிற்பகுப்புப்போம் பொறிகணீங்கிற்காட்சிபோம்
ஓதந்தக்கரணம்போகி லுளவாதனைபோமிருள்போகில்
போதந்தோன்றும்புருடன்றன் போகிற்சர்வஞ்ஞத்வாதி
போதம்போகுங்காலபரம் போகிலவ்வாதனைபோகும்.

(இ-ள்,)=பூததிருஷ்டிநீங்கினுல் பகுப்புநீங்கும் இந்திரியங்கணீங்கினுல் விடயத்தோற்றங்கணீங்கும் சொல்லுகின்ற அந்தக்கரணநீங்கினுல் மனோவாதனைநீங்கும் அவித்தைநாசமாகில் அறிவு தோன்றும் புருடதத்துவநீங்குமாயின் சர்வஞ்ஞத்வமுதலானஅறிவுநீங்கும் பரசொப்பனமாகிய காலபரதத்துவநீங்கினுல் அந்தவாதனைநீங்கும்.=எ

வந்தவியோமநீங்கிடில் வாங்குமிரண்டாம்பாழ்பரத்தின்
தொந்தநீங்கிலுலகம்போந் தோன்றுமாயைதானீங்கில்
பந்தமுறுமவ்வாதனைபோம் பகரவொண்ணுப்பினைநீங்கில்
அந்தமூன்றும்பாழ்போகு மனைத்துமானசிவந்தோன்றும்.

(இ-ள்) பொருந்திய வியோமதத்துவ நீங்கினுல் இரண்டாம்பாழாகிய பரசுழுத்தி நீங்கும் பரதத்துவமாகிய சிவசாக்கிரநீங்கினுல் விசுவம் நீங்கிவிடும் தோற்றப்படுகிற மாயையாகிய சிவசொப்பனம் நீங்கினுல் பந்தத்தையுடைய அந்தவாசனைநீங்கும் அநிர்வாச்சியமாகும் பின்னையாகிய சிவசுழுத்திநீங்கினுல் மூன்றும்பாழாகும் அப்பொழுதே எல்லாமாய் விளங்குகின்ற குருதுரியமாகிய சிவமே பிரகாசிக்கும்,=எ-று, (௩௭)

ஏதேதகன்றததுமுன்ன மியற்றுந்தொழில்கடன்னிடத்தப்
போதேயகன்றவ்வனுபவத்திற் போக்கவேண்டுமெலாமகற்றி
ஈதேயுளமற்றனைவயெல்லா மில்லதென்றேயுணர்ந்தவையும்
ஈதேயெனக்கண்டச்சிவத்தை யிடைவிடாதேபார்த்திருப்பார்.

(இ-ள்,)=எந்தப்பொருள் எந்தப்பொருள்நீங்கினவோ அந்தப்பொருள்கள் முன்பியற்றிய தொழில்களனைத்துந் தன்னிடத்திலப்பொழுதே நீங்கிநின்று அந்தவனுபவத்தில் தள்ளவேண்டு மனைத்தையுந் தள்ளி இஃதே நித்தியவஸ்து மற்றனைவகளெல்லாம் அநித்திய வஸ்துவே யெனத்தெரிந்து அதுகளும் இதுவேயெனக்கண்டு அந்தச்சிவத்தையே சதாகாலமும் பாராமற்பார்த்திருப்பார்கள் அறிஞர்கள்.=எ-

நேரேநெறியிலடைவோர்க்கு நியதிநெறியிலடைவோர்க்கும்
ஊரேதொன்றேயோரொருவர்க் கோரொன்றதனிற்சம்மதமாம்
ஆரேயெனினுமிவையிலொன்றி லாசானுான்மாணுக்கனெத்தால்
சாரோதொன்றுமில்லாத தனிவீடேதாமாகுவரால்

(இ-ள்,)=நேர்வழியாகிய விகங்கமார்க்கமாகச் செல்லுகின்றவர்களுக்கும் நியதிவழியாகிய பிபீலிகா மார்க்கமாகச் செல்லுகின்றவர்களுக்கும் செல்லும்வீடாகியவூர் ஒன்றேயாகும் அந்தவழிகளில் பக்குவத்திற்குத்தக்கபடி ஒவ்வொருவழியில் ஒவ்வொருவருக்குப் பிரியமுண்டாகும் ஆகையால் எவர்களாகிலும் இந்தவழிகளில் ஒருவழியில் அப்பியசித்து சுருதிகுரு -சுவானுபவ மொத்திருக்கச் சுகித்திருப்பார்களாகில் அவர்கள் யாதொரு பற்றுமின்மையாகிய ஒப்பற்ற மோட்சசொரூபமாகவே பிரகாசிப்பார்கள்,=எ-று, (௩௯)

அறையிவ்வொழுங்குகளிலொன்றி லாசானுான்மாணுக்கனெவ்வக்
கறைசெய்யைம்பூதங்கண்முதற் கழன்றொணுதபினையிருய்
இறையேயெனினும்வேறின்றி யெல்லாந்தானேயேகண்ட
நிறைவோரறிவின்மகிழ்ச்சியினு லின்றுகூறுநிலைகேளாய்

(இ-ள்.) சொல்லப்பட்ட இந்தமார்க்கங்களுள் ஒருமார்க்கத்தில் சுருதிகுரு சுவானுபவமொவ்வும்படி களங்கத்தைச்செய்கின்ற பஞ்சபூதமுதல் அநிர்வாச்சியமாகியபின்னை முடிவாக இறைபள்வாகிலும்துவிதமின்றிச் சர்வமுந் தானகவே கண்ட பூரண ஞானிகள் ஞானசந்தோடத்தினல் நின்றுகூறுஞ் சுவானுபூதி நிலைமையைக் கேட்பாயாக;=எ-று. (௪௰)

நானேயென்றுமெவ்விடத்து நன்றாயுண்டாயிருக்குகேன்
நானேயென்றுமெவ்விடத்து நன்றாய்த்தோன்றிவிளங்குகேன்
நானேயென்றுமெவ்விடத்து நன்றாயின்பமாய்நிகழ்கேன்
நானேயென்றுமெவ்விடத்து நன்றாய்விளையாடாநிற்கேன்

(இ-ள்.)=நானே எப்பொழுதும் எந்தவிடத்திலும் நன்மையாய்ச் சத்தாய்இருக்கின்றேன் நானே எப்பொழுதும் எந்தவிடத்திலும் நன்மையாய்ச் சித்தாய்ப் பிரகாசிக்கின்றேன். நானேஎப்பொழுதும் எந்தவிடத்திலும்நன்மையாய் ஆனந்தமாய் ரமிக்கின்றேன் நானே எப்பொழுதும் எந்தவிடத்திலும் நன்மையாய் விளையாடுகின்றேன்.=எ-

உண்டாயென்றுமெவ்விடத்து முளதாயிருத்தலென்சத்தே
உண்டாயென்றுமெவ்விடத்து முளதாய்விளங்கலென்சித்தே
உண்டாயென்றுமெவ்விடத்து முளதாமின்பமென்னின்பே
உண்டாயென்றுமெவ்விடத்து முளதாமென்னுள்யான்மகிழ்கேன்,

(இ-ள்.)=எந்தக்காலத்திலும் எந்தவிடத்திலும்உண்டாகியுள்ளதாயிருப்பது எனது சத்சொரூபமே எந்தக்காலத்திலும் எர்தவிடத்திலும் உண்டாகியுள்ளதாய்ப் பிரகாசிப்பது எனதுசிற்சொரூபமே எந்தக்காலத்திலும் எந்தவிடத்திலும் உண்டாகியுள்ளதாகிய சுகம் எனது சுகசொரூபமே எந்தக்காலத்திலும் எந்த விடத்திலும் உண்டாகியுள்ள என்னிடத்தில் நானேகளிக்கின்றேன்,=எ-று. (சஉ)

இருந்தேதோன்றியிடவேண்டு மெந்தப்பொருளேயானாலும்
இருந்தேதோன்றியிடும்பொருளே யின்பமாகியேநிகழும்
இருந்தேதோன்றுமெவ்விடத்து மென்றுநிகழ்தலொருநானே
இருந்தேதோன்றுமென்னிடத்தி லின்பமாயானேமகிழ்கேன்.

(இ-ள்.)=எந்தவஸ்துவானாலும் உண்டாகியேவிளங்கவேண்டும் உண்டாகிவிளங்கும் வஸ்துவே ஆனந்தமாகப் பிரகாசிக்கும் உண்டாகிவிளங்கும் எந்தவிடத்திலும் எந்தக்காலத்திலும் பிரகாசிப்பது ஒப்பற்ற நானேயாகும் உண்டாகிவிளங்கும்என்னிடத்தில் நானே சுகசொரூபியாய்க் களிக்கின்றேன்,=எ-று, (சங)

எனதுசுபாவிலையினாலே யென்னைத்தானேநானுவாய்
எனதுச[illegible]னாலே யின்னுஞன்னுனிதுவதுமற்
றெனதுபி[illegible]லென் றெண்ணிமானமுடைத்தாகி
எனதுகண்ணேயான்றானே யிருந்துவிளையாடாநிற்கேன்.

(இ-ள்.)=என்னுடைய சுயலீலையால் என்னையே பலவாகக்கண்டென்னுடைய சத்தியினால் இப்படிப்பட்டவன் அப்படிப்பட்டவள் இந்தப்பொருள் அந்தப்பொருள் இது என்னுடையது அது பிறருடையதென்று நினைந்து அபிமான முடையதாகி என்னிடத்தில் நான்தானேயிருந்து விளையாடுகின்றேன்,=எ-று, (௪௪)

எங்கும்விடயமாய்நிகழு மீசனுமங்கங்குத்
தங்குமுயிர்களவைநானாய்ச் சாற்றுஞ்சங்கற்பமுநானாய்
அங்குநாமரூபமதை யையஞ்செய்யுமனநானாய்
அங்குத்துணியுமதிநானா யபிமானகங்காரமுநானாய்,

(இ-ள்.)=சமஷ்டிவிடயமாகப் பிரகாசிக்கும் ஈசுரனும்நானாய் ஆங்காங்குத் தங்கியிருக்கும் ஜீவராசிகளும் நானாய் சொல்லுகின்றசங்கற்பமு நானாய்த் தோற்றப்படுகிற நாமரூபங்களைச் சந்தேகிக்கு மனம் நானாய் அப்பொருள்களை நிச்சயிக்கும்புத்தி நானாய் அபிமானிக்கின்ற அகங்காரமு நானாய்,=எ-று, (௪௫)

சித்தநானாய்ச்சத்தமுன்னாய்ச் செப்புங்கந்தமீறாக
ஒத்தவிடயமைந்தினையு முணருஞானேந்தியநானாய்
சத்தமுதலைந்தினையுணர்ந்து சாற்றும்வசனாதிகள்செய்ய
வைத்தகருமேந்தியநானாய் வகுத்துவிளையாடாநிற்பேன்,

(இ-ள்,)=சித்தநானாய் சத்தமுதல் கந்தமீறாய்ச்சொல்லப்பட்ட பஞ்சவிடயங்களையும் அறிகின்ற ஞானேந்திரியங்கள் நானாய் சத்தமுதலிய பஞ்சவிடயங்களையுமறிந்து சொல்லப்படுகின்ற வசனாதிகளைச் செய்யும்படி ஏற்படுத்திய கன்மேந்திரியங்களும் நானாய் வகுத்து விளையாடுகின்றேன்,=எ-று, (௪௬)

உம்பர்நானாய்நரர்நானா யூர்வநீருறைவநானாய்
வெம்புமிருகங்களுநானாய் விகங்கமொடுதாபரநானாய்
அம்புநானாய்ப்புவிநானா யனலுநானாய்வளிநானாய்த்
தம்பவாகாயமுநானாய்த் தானேவிளையாடாநிற்பேன்,

(இ-ள்,)=தேவரும்நானாய் மனிதரும்நானாய் நிலத்திலூர்வனவும் சலத்திலூர்வனவும் நானாய் வெம்புகின்ற மிருகங்களுநானாய் பறவைகளும் தாவரங்களுநானாய் சலமுநானாய் பிருதிவியுநானாய்தேய்வுநானாய் வாயுவுநானாய் ஸ்தம்பித்திருக்கின்ற ஆகாயமுநானாய்த் தானேதனித்துவிளையாடுகின்றேன்,=எ-று, (௪௭)

தந்தைநானாய்த்தாய்நானாய்த் தனையர்நானாய்த்தமர்நானாய்ச்
சிந்தைமகிழ்தாரமுந்தவனுஞ் செப்புதமையன்றம்பியுடன்
விந்தைபுரிபூடணநானாய் வீடுதாதாபொருணானாய்
புந்திமகிழ்கூர்தலுநானாய்ப் பொருந்திவிளையாடாநிற்கேன்,

(இ-ள்,)=பிதாவும் மாதாவும் புத்திரர்களும் உறவினரும்மனமகிழ்ச்சியைத் தருகின்ற மனைவியும் புருடனும் சொல்லுகின்ற தமையனும் தம்பியும் விந்தையாகியபூஷணங்களும் கிரகமும் தாதுருக்வமும் பொருள்களும் மனமகிழ்ச்சி மிகுதலும் நானாகப்பொருந்தி விளையாடுகின்றேன்=எ-று. (௪௮)

தோற்றநானாய்த்திதிநானாய்த் துடைத்தனானாய்த்திரோபாவம்
ஏற்றமானவனுக்கிரக மிரண்டுநானாயிவையைந்துள்
சாற்றலானதொழிலனைத்துந் தகவேயடக்கியன்றுமுதல்
தேற்றமானசத்தியினாற் றிருந்தவிளையாடாநிற்கேன்,

(இ-ள்) உற்பத்தி ஸ்திதிலயங்களும் நானாய்-திரோபாவம் உயர்வாகிய அனுக்கிரகம் என்னு மிரண்டு கிருத்தியங்களும் நானாய் இந்தப் பஞ்சகிருத்தியங்களுட் கூறப்படுவதான கிரியைகளனைத்துந் தகுதியாயொடுக்கிச் சிருஷ்டி முதல் ஞானசத்தியினால் திருத்தமாக விளையாடுகின்றேன்=எ-று, (௪௯)

தங்கத்தனந்தவிதமாகித் தானேநிகழும்பணிதியெல்லாம்
தங்கத்தினுக்கோர்காலையினுந் தான்வேறாகத்தோன்றாதின்
பங்கற்றொளிருமென்னிடத்திற் பலவாய்நிகழுஞ்சகமுழுதும்
பங்கறொளிரும்யானென்றே பார்த்துவிளையாடாநிற்கேன்,

(இ-ள்,) தங்கத்தினிடத்தி லனந்தவகையாய்ப்பிரகாசிக்கும் பூஷணங்களெல்லாம் அந்தத்தங்கத்திற் கன்னியமாய் ஒருகாலத்திலுந் தோற்றப்படாது அதுபோலப் பின்னமில்லாமல் பூரணமாகப் பிரகாசிக்குமென்னிடத்தில் நானாவாகத்தோற்றப்படும் பிரபஞ்சமனைத்தும்பரிபூரணமாகப் பிரகாசிக்கின்ற நானாகவேகண்டு விளையாடுகின்றேன்.=எ-

சத்தையன்றியொருபொருளுந் தானேயுண்டாயிருக்குமோ
சித்தையன்றியொருபொருளுந் தேஜசுண்டாய்விளங்குமோ
மித்தையானசகமுழுதும் விளங்குமதினின்றதினாலே
எத்தைநோக்கிமகிழ்ந்திடினு மியானேயென்றுமியான்மகிழ்கேன்,

(இ-ள்,) சத்தைத்தவிர ஒருவஸ்துவுந் தானேஉள்ளதாயிருக்குமோ சித்தைத்தவிர ஒருவஸ்துவும் விளக்கமுண்டாகிப்பிரகாசிக்குமோ மி

த்தைவடிவமாகிய பிரபஞ்சமனைத்தும் அதிலிருந்தே தோற்றப்படும் அந்தத்தன்மையினால் எதைப்பார்த்துக் களித்தபோதிலும் எந்தக்காலத்திலும் நானேகளிக்கின்றனன்=எ-று, (௫க)

நித்தமாகியேனிற்கி னிகழுங்காலபரிச்சேதம்
ஒத்தபரிபூரணமாகி லோதுந்தேசபரிச்சேதம்
மத்தமானதேகமே யாகின்வத்துபரிச்சேதஞ்
சித்தமாகியிம்மூன்றுஞ் செல்லாவென்னுள்யான்மகிழ்கேன்.

(இ-ள்,)=நித்தியமாய் விளங்குகின்றமையால் சொல்லுகின்ற காலபரிச்சேதமும் நிறைந்த பரிபூரணமாகப் பிரகாசிக்கின்றமையால் கூறப்படுகின்ற தேசபரிச்சேதமும் சகலபொருள்களும் ஏகாகாரமாய்ப்பிரகாசிக்கின்றமையால் வஸ்துபரிச்சேதமும் ஆகிய இம்மூன்றுபரிச்சேதங்களும் சித்தமாய் என்னிடத்திலில்லாமல் எனக்குள்நானே களிக்கின்றனன்,=எ-று, (௫உ)

சத்தைவேறொன்றிலாமையினாற் சாதிபேதமதுமாயை
சித்தைவிடவேறிலாமையினாற் செப்பும்விசாதிபேதமது
மித்தைநிரவயவமாகின் வேறுவேறாஞ்சுவகதமும்
மித்தையானவென்னிடத்தின் மேவிவிளையாடாநிற்கேன்,

(இ-ள்,)=சத்தைத்தவிர வேறுபொருளின்மையால் சுசாதிபேதமும் சித்தைத்தவிர மாயாகாரியமாகிய வேறு சித்தின்மையால் விசாதிபேதமும் மித்தையாகிய சகலபொருள்களும்நிரவயவமாகவிளங்குகின்றமையால் வெவ்வேறாகிய சுவகதபேதங்களும் என்னிடத் தில்லாமல் நானே பொருந்திவிளையாடுகின்றேன்,=எ-று, (௫௩)

என்னையெனதுநினைவினா லிதுவாய்க்காணுவாய்க்காண்கேன்
என்னையென துநினைவிலதி னேகமாயதுவாய்க்காண்கேன்
என்னையன்றியொருபொருளு மிங்குமங்குமிலையதனால்
என்னையிங்குமங்குமா யானேகண்டுநான்மகிழ்கேன்,

(இ-ள்,)=என்னினைவினால் என்னையேஇதுவாகவும் பலவாகவுங்காண்கின்றேன் என் னினைவின்மையால் என்னையே ஏகமாகவும் அதுவாகவுங் காண்கின்றேன் இகத்திலும் பரத்திலும் என்னைத்தவிர ஒருவஸ்துவுமில்லை அந்தவகையினால் இகத்திலும்பரத்திலும்என்னையே கண்டு நான்களிக்கின்றனன்,=எ-று, (௫௪)

எல்லாநானுயன்றமுத லிருந்துவிளையாடாநிற்க
எல்லாம்வேறென்றெண்ணியே யிருந்துமோகமடைந்தேனே
எல்லாமுடையவருட்சக்தி யிரங்கிமோகமறவீச
எல்லாநானுய்ப்பண்டைப்படி யிருந்துவிளையாடாநிற்கேன்

(இ-ள்,)=சிருஷ்டிமுதல் சர்வமு நானுயிருந்து விளையாடிக்கொண்டிருக்க மயக்கத்தினால் சர்வமும் வேறென்றுநினைத்துப் பிரமைகொண்டிருந்த வென்னை சர்வசக்தியுமுடைய அருட்சத்தியாகிய பெரிய நாயகியார் இரக்கமுற்று எனதுமயக்கநீங்கும்படி கிருபாதிருஷ்டிவைத்தமாத்திரத்தில் சர்வமுநானுய்ப் பழையபடியே யிருந்து விளையாடுகின்றனன்,=எ-று, (ருரு)

இதுவேதுணிவென்றறியாதா ரென்றுநீந்தாரிடர்க்கடலை
இதுவேதுணிவென்றறிந்தோர்க ளென்றுநீந்தார்சுகக்கடலை
இதுவேவேதமுறைப்பதீவு மீசன்முதலோரனுபவமும்
இதுவேதுணிவென்றங்கையினி லெடுப்பேன்மழுவைச்சத்தியமே,

(இ-ள்,)=இதுவேநிச்சயமென் றறியாதவர்கள் எந்தக்காலத்திலும் துன்பமாகிய பிறவிச்சமுத்திரத்தைக்கடந்து முத்திக்கரையை யடையார்கள் இதுவே நிச்சயமென்றுணர்ந்து இவ்வனுபவத்தி லதிதப்பட்டிநிற்பவர்கள் எந்தக்காலத்திலும் ஞானனந்தசமுத்திரத்தினின்று நீந்தமாட்டார்கள் இதுவே ஈச்சுரன் முதலானவர்களது அனுபவமும் சுருதிகளிற்சொல்லப்படும் யதார்த்தநிலையுமாகும் இதுவேநிச்சயமென்று எனது உள்ளங்கையில் மழுவெடுப்பேன் இதுவேசத்தியம்,=எ

இந்தஞானமகிழ்ச்சியுளோர்க் கியம்புஞானசரிதைப்படி
அந்தவூழேநின்றிடுமற் றவைகளெல்லாமகன்றிடுமால்
வந்ததேவர்மானிடர்க்கு மாதர்முதலோர்க்கந்தமில்லா
அந்தவூழேநின்றிடல்போ லாமென்றறைவோர்கற்றுணர்ந்தோர்,

(இ-ள்,) இவ்வகைப்பட்ட ஞானனந்தத்தையுடையவர்களுக்கு ஞானசாரப்படி அதற்கீடாகிய அனிச்சபிராரத்தமேயிருக்கும் ஏனைய பிராரத்தங்க ணீங்கிப்போகும் பொருந்திய தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் ஸ்திரீகள் முதலானவர்களுக்கும் அவ்வவர்களுக்குத்தக்கபடி முடிவில்லாத அந்தந்தஊழ்வலியே முந்தி நிற்பதுபோ லாகுமென்று கற்றுணர்ந்தபெரியோர்கள்சொல்லுவார்கள்,=எ-று, (ருஎ)

குலத்தையுடையோர்தங்களுக்குக் குலாசாரத்தின்வழிநிற்கும்
நலத்தையுடையசமயிகட்கு நவிற்றுநெறியேதாணிற்கும்
பலத்தையுடையஞானிகட்குப் பகரும்படியேதானிற்கும்
வலத்தையுடையவூழென்றே வகுத்தோதுவாக்குமுயர்ந்தோரே,

(இ-ள்,)=வெற்றியுடைய ஆழ்ந்திலைமையானது சாதியிற்பற்றுள்ளவர்களுக்குச் சாதியாசாரவழியாகவும் நன்மைபொருந்திய சமயப்பற்றுள்ளவர்களுக்கு அவற்றிற்கூறப்படுஞ் சமயாசார வழியாகவும் ஞானபலத்தைப்பெற்றுள்ள ஞானவான்களுக்கு ஞானுசாரவழியாகவுமிற்குமென்று பெரியோர்கள் வகுத்துச்சொல்வார்கள்;=எ-று, (ருஅ)

விடயமீதிலுபரதியு மேவுமுயிர்மேனணிபருளும்
அடையுமாசான்மேலன்பு மந்தப்பிரமஞானமுமே
தடையேயின்றியிவைநான்கோர் தனுவாயுடையோர்தமைஞானம்
உடையோரென்பரல்லாரை யுரைப்பர்சோரஞானியென்றே

(இ-ள்,) விடயபோகங்களில் விரத்தியும் தம்மையடுத்துள்ளபக்குவரிடத்தும் ஏனையவுயிர்களிடத்து மிகுந்தகிருபையும் தேட்டரவினுல் எழுந்தருளிவந்தடிமைகொண்ட சற்குருவிடத்தி லன்பும்அழகிய பிரமஞானமுந் தடையில்லாமல் இந்தநான்குமே ஓர்வடிவமாகப் பிரகாசிக்கின்ற ஞானிகளையே ஞானிகளென்றுசொல்லுவார்கள் அங்ஙனமல்லாதவர்களைக் கள்ளஞானிகளென்று அறிஞர் கூறுவார்கள்,=எ

ஆசாரங்களவையில்லா வசடரிடத்தில்விஞ்ஞானம்
தேசாய்விளங்காதபரமதுஞ் சிறப்பேயின்றிச்சண்டாளர்
மாசார்பாண்டந்தனிலுறையும் வான்கங்கையினீரினிழிவாம்
ஏதாகிலும்யோக்கியத்தானத் திருந்தாற்பிரகாசத்தையுறும்

(இ-ள்,)=ஆசாரவொழுக்கங்களில்லாத அசட்ரிடத்தில்உயர்வாகிய பரஞானமானது தேஜசாகப் பிரகாசிக்கமாட்டாது அபரஞானமோவென்றுல் சண்டாளரது அசுத்தமான பாத்திரத்தில் நிறைந்துள்ள தெய்வத்தன்மையுள்ள கங்காதீர்த்தத்தைப்போல இகழ்வடையும் எந்தவஸ்துவானுலும் யோக்கியஸ்தானத்தி லிருக்குமானுல் பிரகாசத்தைப்பொருந்தும்,=எ-று, (கூ0)

கான்றசோற்றின்விடயமதைக் கண்டுமுனங்கைவிடுத்தொழிந்தே
ஆன்றவாசானடிபரவி யமலவேதநெறிசென்று
தோன்றவனுபூதியிற்பரம சுகத்தையடைந்தோர்பினும் பேய்த்தோர்
போன்றவிடயமேவிடுமோ பொருந்திலவர்ஞானியையொக்கும்

(இ-ள்,)=விடயபோகங்களை முன்னமேகக்கிவிட்டசாதத்தைப்போற்கண்டு கைவிட்டொழிந்து சிரேஷ்டமாகிய ஞானுசிரியரது திருவடிகளைவணங்கிச் சுத்தமாகியவேதமார்க்கத்தி லனுஷ்டித்துப் பிரத்திய

ட்சமாகச் சுவானுபூதியிற் பரமானந்தத்தைப் பெற்றுள்ள ஞானிகள் திரும்பவும் கானற்சலம்போன்ற விடயபோகங்களை விரும்புவார்களோவிரும்புவார்களாகில்அவர்கள்சுவானத்திற்குச்சமானமாவார்கள்

இயமநியமத்துடையரா யெழிலார்ஞானயோகராய்
உயர்நற்குருவினருளாலே யோரஞ்ஞானநிவிர்த்தியையும்
சுயசித்தாந்தவாதியையுந் தோன்றுமநுபூதியிலடைந்தோர்
பயனில்விடயந்தனைவிரும்பார் பற்றுயுழலுமற்றையரே.

(இ-ள்,)=இயமநியமமுதலிய* அஷ்டாங்கயோகங்களையுமுடையவர்களாய் அழகியஞானயோகத்தைப்பொருந்தினவர்களாய்உயர்வாகியபரமாசிரியரதுகிருபையால் ஒப்பற்றஅஞ்ஞானவிடுதியையும்யதார்த்தமாகிய சித்தாந்தநிலைமையையும் உண்டாகியசுவானுபூதியில்பெற்றுச்சுகித்திருப்பவர்கள் பயனின்மையாகிய விடயவின்பத்தை விரும்பார்கள் அங்ஙனமல்லாதவர்கள் அவற்றிற்பற்றுள்ளவர்களா யலைந்துதிரிவார்கள்,=எ-று. (சுஉ)

மனனசமாதியுடையோற்கு வருத்தவியமநியமமுமில்
சனனமரணவித்தான தகுநீடிருளுநிவிர்த்தியுமில்
கனநற்பரமானந்தமதுங் கைகூடாதுதான்வாளா
மனனமதிலேமகிழ்வெய்தி வசனஞ்செயுமுன்படிமயங்கும்,

(இ-ள்,)=மனனசமாதியுடையவனுக்கு சுருதியிற் சொல்லப்பட்ட இயமநியமாதிகளுமில்லை பிறப்பிறப்புக்குக் காரணமாகிய தகுந்தமூலாஞ்ஞானவிடுதியுமில்லை மேலாகிய பிரமானந்தமுஞ் சித்திக்கமாட்டாது அவன்விருதாவாய் மனனத்திலேயேமகிழ்ச்சியடைந்து பிறரிடத்தில் வசனஞ்செய்வன் பிறகு பழையபடியேமயங்கிநிற்பன்,=எ-று

அந்தரங்கத்தொருவனையோ ரரிவையொருத்திதாங்புணரும்
அந்தவகையின்வெளியாகு மரிவைவடிவிலதுபோல
பந்தமறுதத்துவமுணர்தல் பரமாந்தரங்கமானாலும்
தொந்தமகன்றவகைதோன்றுஞ் சொல்லானடையாற்பாவனையால்,

(இ-ள்,)=ஒருஸ்திரீயானவள் அந்தரங்கமாகியவிடத்தில் ஒருபுருஷனைக்கூடிப்புணர்ந்தால் அந்தப்புணர்ச்சிவகை அவளது உருவத்திற்

* அஷ்டாங்கயோகமாவன இயமம்-நியமம்-ஆதனம் - பிராணாயாமம்-பிரத்தியாகாரம்-தாரணை-தியானம்-சமாதி என்பனவாம்.

காணப்படும் அதுபோல பந்தமின்றிய * தத்துவப்பொருளையறிதல் பரமரகசியமாயிருந்தாலும் விடயங்களிற் பற்றற்றிருக்கும்வகை; சொல்லினாலும் நடையினாலும் பாவனையினாலுங் காணப்படும்,=எ-று. ()

மருளையுடையபித்தனையு மருளில்லாதசுத்தனையும்
மருளையிலரோ துணிவாக மதிக்குமந்தமுறைமைபோல்
தெருளையுடையஞானியையுந் தெருளில்லாவஞ்ஞானியையும்
தெருளையுடையோரோ துணிவாய்த் தேருமவர்சொன்னடையினுமே,

(இ-ள்,)=மருட்சியுடையபித்தனையும் மருட்சியில்லாதசுத்தனையும் மருட்சியில்லாதவர்களே நிச்சயமாக மதித்தறிவார்கள் அந்தவகை போலத் தெருட்சியுடையஞானியையும் தெருட்சியில்லாத அஞ்ஞானியையும் தெருட்சியுடையஞானவான்களே அவரது * சொல்லினாலும் நடையினாலும் நிச்சயமாகத்தெரிவார்கள்,=எ-று. (கரு)

தத்துவங்களெழுநான்குஞ் சாற்றுமாயைதானிவையின்
கொத்துகளைப்பார்த்தறவீசிக் கூறுமூன்றும்பாழ்கடந்து
தொத்துமற்றொன்றில்லாத சுவையானந்தப்பூவையையே
அத்துவிதமாய்த்தினம்புணர்வோ ரழியும்போகம்வேண்டுமோ

(இ-ள்,)=இருபத்தெட்டு தத்துவங்களுஞ்சொல்லப்பட்ட மாயாகாரியங்களேயாகும் இந்தத்தத்துவக்கூழாங்களனைத்தையுங்கண்டு கழித்து மூன்றும்பாழாகிய சிவசுழுத்தியுநீங்கி ஒருதொந்தமுமில்லாதஇன்புருவப் பரானந்தமாகிய ஸ்திரீயைத் துவிதமின்றி அத்துவிதமாய்ப்புணர்ந்து மகிழ்கின்றஞானிகள் க்ஷணத்தில் அழிந்துவிடுகின்ற விடயபோகத்தை விரும்புவார்களோ விரும்பார்,=எ-று, (கசு

யோகமதனிலுறுபயனை யுவர்த்தேஞானநெறிமேவி
ஏகமெனுமப்பிரமபத மெய்தியாருடம்பிறந்தோர்
தேகவடிவாயேநின்று சிந்தித்தனுசந்திக்கிலுள
போகமதனைமேவிடுமோ பொருந்திலூர்ப்பன்றியையொக்கும்,

(இ-ள்,)=யோகமார்க்கத்தினா லுண்டாகின்ற பயனைவெறுத்து ஞானமார்க்கத்தையடைந்து ஒன்றாகிய அந்தப்பிரமபதத்தைப்பெற்றுஆ

---

* தத்துவப்பொருளையறிதல் தற்பததொம்பத லட்சியார்த்தமாகிய பிரமகூடஸ்தனையறிதல்.

சொல்-நடை என்றதனால் பாவனையுங் கொள்க.

ரூடஞானம்பிறந்த ஞானிகள் பிராரத்தநாசபரியந்தம் தேகாகாரப்பட்டுநின்று சிந்தித்து அநுசந்தானஞ்செய்துவருங்காலத்தில் உண்டாயிருக்கின்ற விடயபோகங்களை விரும்பிப்பொருந்துவார்களோ பொருந்துவார்களாகில் ஊர்ப்பன்றிக்குச்சமானமாவார்கள்,=எ-று. (௬௭)

அலைவையிறந்தவிடத்தந்த வானந்தம்மற்றவ்வின்பம்
அலைவையுடையவிடத்தென்ற லறியாமையினாலெவ்விடத்தும்
அலைவையிறந்தவிடத்தன்றி யானந்தஞ்சற்றும்முதியா
தலைவையுடையவிடத்தரந்தை யென்றேயறிஞரலையாரே,

(இ-ள்,)=அந்தஞானானந்தம் அலைவற்றவிடத்தி லுண்டாகும் அந்தஆனந்தம்அலைவுள்ளவிடத்தி லுதயமாகுமென்பது அஞ்ஞானத்தினாலாகும் எந்தவிடத்திலும் அலைவற்றபொழுது ஆனந்தமுதிக்குமல்லது அலைவுள்ளபொழுது ஆனந்தமுதயமாகமாட்டாது அலைவுள்ளவிடத்தில் துன்பமென்றேதெரிந்து பெரியோர்கள்அலைந்து திரியார்கள்,=எ-று. (௬௮)

சுணங்கன்றனதுரசமிதென்றே தோன்றவறியாதெலும்பின்கண்
இணங்கிமகிழுமதினின்ப மெய்தும்வழிகாணாதென்போல்
பிணங்களெல்லாஞ்சுகமென்றே பேணிப்போகந்தனைவிரும்பும் (கம்
குணங்கொள்ஞானியொருவனுமே கொள்ளானின்புண்டெனப்போ

(இ-ள்,)=நாயானது தான்கடிக்கின்ற எலும்பிற் காணப்படும் ரசத்தைத் தன்வாயிலிருந்துவரும் ரசமென்று கண்டுகொள்ளாமல் அவ்வெலும்பைக்கடித்து மகிழ்ச்சியடையும் அதுபோல இன்பம்வருமார்க்கத்தை அறிந்துசுகிக்காமல் என்போன்றபிணங்களெல்லாரும்இன்பமாகக்கருதி விடயபோகத்தை விரும்புவார்கள் சுத்தகுணங்களைப்பொருந்திய ஞானியொருவனே விடயபோகத்தில் இன்பமுண்டென்று விரும்பான்,=எ-று. (௬௯)

உள்ளபொருட்கேயின்பென்று முளதாமென்றுமில்லாத
கள்ளமுடையபோகத்திற் கானுஞ்சுகமேதின்பென்றே
உள்ளமகிழுமசத்தரெலா முணர்ந்தஞானியொருவனுமே
பொள்ளலுடையபோகத்தைப் பொருந்தான்பொய்யாதலினாலே,

(இ-ள்,)=இன்பமானது சத்தாகிய பொருளினிடத்தில் எப்பொழுதுமுள்ளதாகும் எப்பொழுது மித்தையாகிய கள்ளமான விடயபோகத்தில் இன்பமுண்டாகுமோ உண்டாகாது அஞ்ஞானிகளெல்லாரும் அதையின்பமென்று மனங்களித்திருப்பார்கள் ஞானியொருவனே பொய்யாகிய போகத்தைப் பொய்யாகையால்விரும்பான்.=எ-று. ()

ஊனதாகிநிற்போற்கே யுலகனென்றுபேருடைத்தாம்
ஆனவூனிதனக்கறிவா னந்தந்தோன்றுமோவஃதின்
ஞானமாகிநிற்போற்கே ஞானியென்றுபேருடைத்தாம்
ஆனஞானிதனக்கிந்த வகிலவின்பந்தோன்றாதே,

(இ-ள்,)=தேகந்தானுயிருப்பவனுக்கேஉலகனென்கிறபெயருடைய தாகும் அங்ஙனமாகிய அஞ்ஞானிக்கு அறிவானந்தம்பிரகாசிக்குமோ பிரகாசியாது அதுபோல ஞானமேதானுயிருப்பவனுக்கு ஞானியென்கிறபெயருடையதாகும் அந்தஞானிக்கு இந்தவுலகவின்பந்தோன்றாதாகும்,=எ-று, (எக)

ஏகதேசதேகமதா யிருந்தேயறிவானந்தமதை
ஏகபோகஞ்செயக்கூடா ததுபோற்சொருபஞானிக்கும்
ஏகதேசவின்பத்தை யெங்கும்பூர்ணமாயிருந்தே
ஏகபோகஞ்செயக்கூடா தினமுடையோர்கூடுமென்பார்.

(இ-ள்,)=ஏகதேசமாகிய சரீராகாரமாயிருந்து ஞானானந்தத்தை ஏகபோகமாயனுபவிக்கப்படாது அதுபோல சொருபஞானமுடையவனுக்கும் ஏகதேசமாகிய விடயவின்பத்தை எவ்விடத்தும் பூரணமாயிருந்து ஏகபோகமாயனுபவிக்கப்படாது இழிவையுடையவர்கள் அங்ஙனமனுபவிக்கக்கூடுமென்பார்கள்,=எ-று. (எஉ)

எங்கெங்கிருந்தெய்திடுமின்ப மெழில்வீட்டின்பமெனவேகண்
டங்கங்கருந்துவோமென்னி லறிஞர்கூறுமுறையன்றே
இங்கங்கென்றில்லாவின்ப மெய்திஞேர்கட்கொருக்காலும்
இங்கங்கென்றேதோன்றிடுமோ வென்றும்புரணமியல்பானுல்,

(இ-ள்,)=எவ்வெவ்விடத்திலிருந்துண்டாகும் விடயானந்தங்களையும் அழகியஞானானந்தமாக ஆங்காங்கனுபவிப்போமெனின் அங்ஙனம் வசனிப்பது அறிஞர்கள்வசனிக்கும்வசனமல்ல இங்கங்கென்றுவசனிக்கப்படாத ஞானானந்தத்தைப்பெற்றவர்களுக்குப் பூரணநிலையேஇயல்பானுல் இங்கங்கென்னுந்தோற்றரவுண்டாகுமோ உண்டாகாது,=

பங்கேதொன்றுமில்லாத பரமாயெங்குநிற்கினுமுன்
இங்கேநின்றவாதனைக ளிருக்குமெனின்முன்சாதகத்தில்
தங்கேதொன்றுமில்லாமற் சரித்ததாகிலதேனிற்கும்
இங்கேயுறைந்தபாண்டத்தி லிலுப்பைப்பூவின்மணமுண்டோ,

(இ-ள்,)=ஒருபகுப்புமின்றிய பிரமசொரூபமாயெவ்விடத்தும்விவகரித்தபோதும் இங்கிருந்தபழையவாதனைகளிருக்குமெனின் முன்னர் அப்பியாசகாலத்தில் ஒருதடையுமின்றி விடயங்களில் வாசனாக்ஷயமுண்டாயிருக்குமானால் அந்தவாதனைகள் ஏனிருக்கும் பெருங்காயமிருந்தகுடுக்கையில் இலுப்பைப்பூவின்வாசனையுள்ளதோ இல்லை. ()

இயமநியமமியற்றாம லெழிலார்நிட்டையடைவோர்க்குச்
சுயநற்சொரூபாநந்தமதுந் தோன்றாதிருளுமாறாது
பயந்தபரமமடைந்தவர்போற் பாவித்துளத்திற்பினுமிந்தக்
கயவர்க்குரித்தாம்போகத்தைக் கருதியிருந்துந் தொடர்ச்சியென்பர்,

(இ-ள்,)=இயமநியமாதிகளைச் செய்யாமல் அழகிய ஞானநிஷ்டை அடைபவர்களுக்குச் சுயமாகிய ஞானானந்தமும்வெளிப்படாது அஞ்ஞானநிவிர்த்தியுமுண்டாகாது அவர்கள் மேலானபிரமசுகத்தைப்பெற்றவர்கள்போல மனத்திற்பாவித்திருந்து பின்னரும் கீழ்மக்களுக்குரிய இந்தவிடயபோகங்களைப்பற்றியிருந்தும் கேட்பவர்களுக்குப் பிராரத்தகன்மமென்பார்கள்,=எ-று. (௭௫)

தனதென்றுரைக்குமவையெல்லாந் தள்ளியினிமேற்றனதென்னாக்
கனவவ்வறிவுதானாகக்கண்டானந்தமடைந்தோர்க்கு
மனதில்வருந்துமவையெல்லாம் வந்துவருத்தாதுடலினையே
தினமும்வருந்திவிடப்படாச் செய்கையதுவேவாதனையாம்;

(இ-ள்,)=தன்னது தன்னதென்று சொல்லப்படுந் தத்துவங்கள் முழுவதுங்கழித்து அதற்குமேல்தன்னதென்றுசொல்லப்படாதமேலான அறிவேதனது சொரூபமாகக்கண்டு பிரமசுகம்பெற்றவர்களுக்கு மனத்தில்வருந்துகின்ற விடயவாதனைகளெல்லாம் வந்துவருத்தாதுசரீரத்தொடர்ச்சியையே நாள்தோறும்வருந்திவிட்டுவிடப்படாதசெய்கையாகும் அதுவேவாதனையாம்,=எ-று. (௭௬)

உடந்தையானவுடன்முதலே யுயிர்க்குவேறுகூறாக்கிக்
கடந்தசிவமேதானாகக் கண்டுதெளிந்தோர்க்குடன்முன்னாத்
துடர்ந்தபோகங்கலங்கியிடுந் துடர்ந்தேசிற்கிற்றேறினதில்
கடைந்ததயிருங்கடையாத கட்டித்தயிருந்தோன்றிடுமே,

(இ-ள்,)=தொடர்ச்சியாகியசரீரமுதலே ஆன்மாவுக்குவேறுபடுத்தி அதீதமாகியசிவமே தானாகக்கண்டு தெளிந்த ஞானிகளுக்குச் சரீரமாதியாகத் தொடர்ந்த போகங்கள் கலங்கிப்போம் தொடர்ந்திருக்கு

மாகித் தெளிந்ததேயில்லை கடைந்தநயிரும் கடையாதகட்டித்தயிரும் பார்க்கும்பொழுதேகாணப்படும்,=எ-று. (எஎ)

ஆகுவுறையுங்கட்டியிதென் றறியப்போமோவெனிலந்த
ஆகுவுறைதற்கானதிலே யையந்தோன்றுமதுபோல
ஆகுமொழியையுடையோர்க ளையந்தோன்றுஞானமதற்
காகும்விடயமுடையோர்க ளையந்தோன்றாதுணர்ந்தோர்க்கே,

(இ-ள்,)=ஒருகிரகத்தில் பெருச்சாளி யிருக்குமிடம் இதுவென்றறியக்கூடுமோவெனின் அந்தப்பெருச்சாளி யிருப்பதற்குத் தகுதியாகியவிடத்தில் சம்சயந்தோன்றும் அதுபோல அறிஞர்களுக்குவிடயத்திற்குரிய வசனிப்பை யுடையவர்க ளிடத்தில் சம்சயந் தோன்றும் ஞானத்திற்குரிய வசனிப்பையுடையவர்க ளிடத்தில் சம்சயந் தோன்றாது,=எ-று. (எஅ)

அகத்திலுளதேபுறத்துண்டா மகத்தில்லாதேபுறத்தில்லை
சகத்திலுள்ளோரோதிடுமித் தகைமையென்றுமதுபோலத்
தகர்த்திவ்விடயமனுபவமாய்த் தனையேகண்டோர்புறத்துறினுந்
தகர்த்தபடியேநின்றுவிடுஞ் சாராதிதயத்துளபடியே

(இ-ள்,)=அகத்திலுள்ளதே புறத்திலுண்டு அகத்திலில்லாதது புறத்திலில்லையென்னும் இந்தத்தகுதியாகிய பழமொழியை உலகத்தார்எப்போதும் வழக்கமாகச் சொல்லுவார்கள் அதுபோல இந்தவிடயங்களைத்தடுத்துச் சுவானுபவமாய்த் தன்னையே கண்டுகளித்த அறிஞர்கள் தடுத்தபிரகாரமே சுவானுபூதியில் விளக்குவார்கள் அவர்களிருதயத்தில் உண்மையாகவே அந்தவாதனைகள்பொருந்தாது.=எ-

போடவேண்டும்புடமெல்லாம் போட்டுத்தங்கமாகினதிற்
கேடதானகளிம்பென்றுங் கிட்டாதஃதிலியதிபணிச்
சேடமானசிவமாகித் திளமுமதுவாய்நின்றிடுவோர்க்
கீடதானமாயையென்று மிலதேயாகிப்போய்விடுமால்,

(இ-ள்,)=போடவேண்டிய புடங்களெல்லாம்போட்டுத் தங்கமானால் அந்தத்தங்கத்திற்கேடாகிய களிம்பு எப்போது மிராது அதுபோலச் சகலதத்துவங்களையும் நேதிசெய்து நேதிசெய்யப்படாத சிவமேதானுமிச்சதாகாலமும் அந்தச்சிவமாய்ப் பிரகாசிக்கின்றஅறிஞர்களுக்கு இரண்டாம்வஸ்துவாகிய மாயாகாரியங்கள் எக்காலத்திலும் இல்லாமற்போய்விடும்,=எ-று. (அ௰)

உலகத்துளவெப்பொருள்களையு முளலக்கணங்கொண்டிஃதிதென்
றிலகக்குணிக்கலாமஃதி னில்லாமாயையில்லெனவே
விலகியிதனுக்கதிட்டான மெய்பாம்பிரமமானோனைக்
குலவுமுணர்வுசரிதைகொண்டே குணிக்குமாயையொழிந்தோரே,

(இ-ள்,)=உலகத்திலுள்ளவெந்தப்பொருள்களையும்அவ்வவற்றிற்குள்ள லட்சணங்களைக்கொண்டு இதுவென்றுதெளிவாய்மதித்தறியலாகும் அதுபோல இல்லாதமாயையு மில்லையென்றே விட்டொழிந்து இதற்கதிஷ்டானமாகிய உண்மையான பிரமசொரூபமாய்ப் பிரகாசிக்கின்ற ஞானிகளையும் பிரகாசிக்கின்ற ஞானசாரத்தைக்கொண்டுமாயைநீங்கிய பெரியோர்கள் மதித்தறிவார்கள்,=எ-று, (அக)

பிணிகளௌஷதங்கிலாயுமற்றைப் பேசுந்தெய்வீகத்தாயும்
தணியிலுடலிற்சுகம்பிறந்து தணிந்துதோன்றுமதுபோல
எணியவெணியாங்கெவ்விதத்து மெய்திமகிழ்ந்தோர்தமதறிவில்
கணமதேனும்விடயமதிற் கலங்காதறிவாய்த்தணிந்திருக்கும்.

(இ-ள்,)=பிணிகளானது வயித்திய முறையினாலாகிலும் சொல்லுகின்ற தெய்வீகத்தினாலாகிலும் நீங்குமாகில் சரீரத்தில் சுகம்பிறந்து சவுக்கியமுண்டாகும் அதுபோல எந்த வகையிலும் எண்ணியவைகளெண்ணியதுபோலப்பெற்று ஞானமகிழ்ச்சி யடைந்தவரது அறிவினிடத்தில் க்ஷணப்போதாகிலும் விடயபோகத்தினாற் கலங்குறாதஅறிவாகவே விஸ்ராந்திபெற்றிருக்கும்,=எ-று, (அஉ)

எறியிற்கதிரோன்சாளரத்தி லிருந்துதோன்றும்பூதவணு
அறவிட்டெறியும்பேரொளியி லஃதுதோன்றாததுபோல
அறிவிற்றோன்றுமுலகெனினு மகண்டாகாரவறிவதனில்
செறியத்தோன்றாச்சிற்றறிவிற் செகம்போல்விளங்கியிடுமன்றே,

(இ-ள்,)=சூரியகிரணமானது பலகணிவழியிற் பிரகாசிக்குமானால் அதனிடத்தில் *பூதவணுக்கள்தோற்றப்படும் கிரணங்கள்முழுவதும் விட்டுப் பிரகாசிக்கின்ற பெரும்பிரகாசத்தில் அவ்வணுக்கள்தோற்றப்படாது அதுபோல உலகமானது அறிவிற்றோன்றுமானாலும் அகண்டாகாரவறிவில் பொருந்தித் தோன்றாது சிற்றறிவில்மாத்திரம் உலகம்போற்றோற்றப்படும்,=எ-று, (அங)

* பூதவணு-சிறியவுயிர்கள்,

தரையுளோர்கண்மிகவருந்தித் தரினுமுடையூணிவையன்றிப்
புரையிலோர்கண்மற்றொன்றைப் பொருந்தநினைபாவென்போலும்
வரைவிலோர்கண்மிகவருந்தி வாங்கிப்பொருந்திமயங்கியிடும்
கரையில்கருமந்தன்னாலே கைவிட்டொழிந்தஞானிகளே.

(இ-ள்,) உலகத்திலுள்ளவர்கள் மிகவுமுபசரித்துக் கொடுத்தபோதிலும் வஸ்திரம் போஜனமாகிய இவற்றையல்லாமல் குற்றமின்றிய ஞானிகள் வேறொருபொருளையும் அடையக்கருதார்கள் என்போலுமறிவில்லாதவர்களாய் முன்னமே சகல பற்றுக்களையுங் கைவிட்டொழிந்த சோரஞானிகள் தாங்கள் முற்செய்துள்ள அளவற்றகன்மபலத்தினல் மிகவும்பிரயாசைப்பட்டு வாங்கப்பெற்று அப்பொருள்களில் மயங்கிக்கிடப்பார்கள்,=எ-று, (அச)

உடலைக்குறித்தோபாலருந்த லூரைக்குறித்தோவலரவர்க்கே
நடலையுலகையொழிந்தந்த நாட்டம்பிறந்தவ்வானந்தக்
கடலையமிழ்ந்தலெனிலந்தக் கடலிலமிழ்ந்துமன்னோரைக்
கடலைமண்டைக்கொண்டோரைக் காணுமதுபோற்றோன்றிடுமே,

(இ-ள்,)=பாலைக்குடிப்பது சரீரசுகத்தைக்குறித்தோ ஊரினர் புகழ்ச்சியைக்குறித்தோ அவரவர் சரீரசுகத்தைக்குறித்தேயாகும் அதுபோல பொய்யாகிய வுலகநாட்டநீங்கி ஞானநாட்டம்பிறந்து அவ்வானந்தசாகரத்தில் மூழ்கியிருப்பதே அவர்கள்கருத்தாகும் ஆனல்கடலில் மூழ்குகின்றவர்களையும் மூழ்கிவிட்டவர்களையுங் கண்டறியலாம் அந்த வகையாகவே சாதகர்களையும் சாத்தியர்களையுங் கண்டறியலாம்,=எ-று, (அரு)

கனியும்பாலுஞ்சருக்கரையுங் கலந்தவன்னமிரம்பவே
அனிசம்புசிப்போர்நீர்க்கூழை யருந்தநினைக்குமோவஃதின்
இனியகுருவினருளாலே யிருளுநீங்கியானந்தம்
நனியுமுடையோர்விடயமதை நணுகார்நணுகினகைக்கிடமே,

(இ-ள்,)=முப்பழமும்பாலுஞ் சருக்கரையுங்கலந்த சாதத்தை நிதமும் வயிறாரப்புசிப்பவர்கள் நீர்க்கூழைப புசிக்க நினைப்பார்களோ அதுபோல பிரியவடிவமாகிய ஞானாசிரியரது கிருபையால் அஞ்ஞானவிருளுநீங்கி ஞானானந்தத்தை நன்றாகப் பெற்றவர்கள் விடயவின்பத்தைப்பொருந்தார் பொருந்துவாராகில் சிரிப்புக்கிடமாகும்,=எ-று,

ஞானமுடையோர்க்கேதறினு நணுகாகுற்றமெனத்துறவோர்
ஊனமனையோர்க்குரைத்திடின்மற் றொன்றேகுற்றமனையுடையோர்க்

இந்தநெறியில்விகற்பமதை யெய்தியானுமவளருளால்
பந்தமகன்றுபரவெளியைப் பார்த்தேனனைத்துந்தானாகி
அந்தமுமுன்மூன்றுமில்லா வகண்டாகாரவடிவாகித்
தொந்தமொன்றுமிலதாகிச் சுயமாய்விளங்கியிருந்ததுவே,

(இ-ள்,)=நானும்இந்தவொழுங்கினால் விகற்பபட்சத்தையடைந்து உமாதேவியாரது திருவருளால் பாசபந்தநீங்கிப் பராகாசத்தைப்பார்த்தேன் அங்ஙனம் பார்த்தவளவில் சர்வமுந்தானாகி ஆதிமத்தியாந்தமாகிய மூன்றுமில்லாத அகண்டாகாரசொரூபமாகி ஒருதொந்தமுமிலதாகிய சொச்சொரூபமாகப் பிரகாசித்திருந்தது.=எ-று. (௯௩)

வேறு,

நிமலமாம்பிரமவனுபவமுரைக்கே னின்றதுசிருட்டிமுன்னானாய்
நிமலமாமெனதுநிலையினினின்றே நினைவெனுமாயையிற்பாய்ந்து
நிமலமாம்பரமாயுயிர்களாயுலகாய் நிலையதுபோலவேவிரிந்து
நிமலமாமென்கணப்படியொடுங்கி நின்றிடுவேனிதுநிசமே.

(இ-ள்,)=நிருமலமாகிய பிரமானுபவத்தைச்சொல்லுகின்றேன் சிருஷ்டிகாலத்திற்குமுன்பு நானேயாகி நிருமலமாகிய எனது நிலையிலிருந்து நினைவாகியமாயையிற் பிரதிபலித்து நிருமலமாகிய பரஜீவஜெகங்களாய் உள்ளதுபோலப்பரவிநின்று நிருமலமாகிய வென்னிடத்தில் அந்தப்பிரகாரமே ஒடுங்கிநிற்பேன் இதுவுண்மையாகும், =எ-

அலைவில்சிற்சொரூபமஃதுமல்லாதா யதைவிடவேறுமல்லாதாய்
அலைவுசெய்யஞ்ஞானத்திசை சத்தாயஃதகன்றிடும்பொழு தசத்தாய்
அலைவின்றித்தேறின்முக்காலு மிலதாயநாதியாயனிர்வசனமதாய்
அலைவுறுமாயையுடையமாயாவி யானேனாகியசோகம்.

(இ-ள்,)=சலனமின்றிய ஞான சொரூபமாகிய சத்துமல்லாததாய் அந்தச் சத்தைத்தவிர வேறுவஸ்துவுமல்லாததாய் அலைவைச்செய்கின்ற அஞ்ஞானதசையிற் சத்தாகியும் அவ்வஞ்ஞானவிடுதியில் அசத்தாகியும், சலனமின்றிவிசாரித்துத் தெளிந்தவிடத்தில் காலத்திரயத்திலு மில்லாததாய் அநாதியாய் அனிர்வசனமாத்திரமாய்அலைவைப்பொருந்துகின்ற மாயாசக்தியையுடைய மாயாவியாய்ப் பிரகாசிக்கின்றனன்-நானாகிய சோகம்பாவனையால்.=எ-று. (௯௫)

பரசொரூபத்துக்கபினமும்பினமும் பகர்பினபின்னமுமலதாய்
நிரவயமலதாய்ச்சாவயமலதாய் நிரவயசாவயமலதாய்த்

திரசத்தையசத்தைச்சதசத்தையலதாய்ச்செப்பியவனிர்வசனமதாய்ப்
பரப்பிரகிருதிதமசெனுமாயை பண்டையிலுடையதிச்சோகம்-

(இ-ள்,)=இந்தச்சோகம் பாவனையானது பிரமசொரூபத்துக்கபின்னமும் பின்னமும் சொல்லுகின்ற பின்னா பின்னமும் அல்லாததாகி நிரவயமும் சாவயவமும் நிரவயசாவயவமு மல்லாததாகிஸ்திரமாகிய சத்தும் அசத்தும் சதசத்துமல்லாததாகிச் சுருதியிற் கூறப்படும் அனிர்வசனரூபமாய் பரப்பிரகிருதி தமசென்கின்ற மாயையை அனாதியேயுடையதாகும்,=எ-று. (௬௬)

எனைமறைப்பறைச்சிதீண்டியுமகத்தி லிருளிறந்தும்மொளிபிறந்தும்
பினைநனிமாயைதூரத்தியாயும் பிரவஞ்சமருந்தியுமிவையின்
உனிநின்றுபார்க்கிற்பஞ்சசூதகமு முண்டெனக்கேயிவைதீரா
துனிநின்றுபார்க்கினிவைகட்காளானே,னொருவிருத்தாசலமடைந்தே

(இ-ள்,)=என்னை வேதப்பறைச்சியாகிய அருட்சத்திபரிசித்தும் அகத்தில் அஞ்ஞானப்பிள்ளையிறந்தும் ஞானப்பிள்ளைபிறந்தும் பின்னை மாயையென்கிற நல்லஸ்திரீகள் தூரஸ்திரீகளாகியும பரான்னத்தைப் புசித்தும் விசுவக்கிராசஞ்செய்தும் இவற்றினால்உன்னிப்பார்க்குமிடத்தில் எனக்குப் பஞ்சசூதகங்களுமுள்ளது இவைகள்நீங்கமாட்டாது உன்னிப்பார்க்குமிடத்தில் ஒப்பற்ற விருத்தகிரியைச்சேர்ந்து இவைகளுக்காளாகினேன்,=எ-று, (௬௭)

என்னையேதோன்றுவகைகொலைபுரிந்து மினியதோர்ஞானமாணிக்கந், தன்னையேகளவு புரிந்துமற்றதன்மேற் றவிர்ந்திடா மயக்கத்தைக்கொண்டும், பின்னையுமதிலே காமத்தைப்பெற்றும் பேச்சிறந்ததுவெனவுரைத்தும், இன்னவைம்பாதகங்கட்காளானே னெழில்விருத்தாசலமடைந்தே,

(இ-ள்,)=யானாகிய அகங்காரத்தையே தோன்றாதபடிகொலைசெய்தும் இனிதாகிய ஞானமாணிக்கத்தைக் களவுசெய்தும் அந்தமாணிக்கத்தின்மேலொருபோது நீங்காத மயக்கத்தைவைத்தும் மேன்மேலும் அதனிடத்தில் காமத்தைக் கொண்டும் சொல் லிறந்ததென்று சொல்லியும் அழகியவிருத்தகிரியைச்சேர்ந்து இவ்வகைப்பட்ட பஞ்சபாதகங்களுக் காளாகினேன்,=எ-று. (௬௮)

இந்தசைசூதகங்கள்பாதகங்க ளெய்தியுமிடமுதற்பற்றாம்
ஒத்தவில்லுடையிந்தியங்காணங்க ளொன்றுந்தாக்கறவெட்டவெளியில்

வைத்தெனைக்கண்டபொழ்செய்ததந்தோ மலையையேநம்பியுலகில்
இத்தனைகொடுமையுடையவித்தலந்தா னெனக்கென்றேயிருந்ததோ
(வறியேன்.

(இ-ள்,)=நான்மலையையேநம்பி யனுசரித்தும் எனக்கு இவ்வகைப்பட்ட துக்கங்களும் பாதகங்களும் சேர்ந்ததல்லாமல் இடமுதலிய புறப்பற்றும் ஒத்திருக்கின்ற தேகேந்திரிய கரணங்களென்னும் அகப்பற்றுமாகிய ஒன்றுந்தாக்காதபடி வெறுவெளியில்வைத்துப் பாழாக்கி விட்டது ஐயோ இவ்வுலகத்தில் இவ்வளவு கொடுமையுடைய இந்த ஸ்தலம் எனக்கென்றிருந்ததோ வறிகிலன்.=எ-று. (௯௯)

வேறு,

விருந்தகிரிவடிவான விறைபவனும்வாழ்க
வினையனேற்கருள்விருத்த வம்பிகையும்வாழ்கக்
கருத்திலுறவெனக்கருளும் பிரணவமும்வாழ்கக்
காரணியைபடையு மடியாருநனிவாழ்கத்
திருத்தமுடன்றலமுமிகச் சிறப்பதாய்வாழ்கச்
சேர்ந்துறையுமியாவர்களுஞ் செல்வமுடன்வாழ்க
இருத்தியெனையுமையருளால் யானுணர்ந்தபடியே
எல்லோருமுணர்ந்து வாடுதலறவேவாழ்க.

(இ-ள்.)=பழமலையுருவமாகப் பிரகாசிக்கின்ற விருத்தாசலேஸ்வரரும் வாழக்கடவது. வினைவசத்தனாகிய அடியேனுக்குக்கிருபைசெய்த விருத்தாம்பிகையும்வாழக்கடவது. கருத்திற் பொருந்தும்படி யெனக்கனுக்கிரகித்த ஓங்காரமும்வாழக்கடவது. சர்வகாரணியாகிய பெரியநாயகியம்மையாரை உபாசிக்கும் அடியார்களும் நன்றாகவாழக்கடவது. இந்தஸ்தலமுந் திருத்தமுஞ் சிறப்புமாக வாழக்கடவது. இந்தஸ்தலத்திற்சேர்ந்து வசிக்கின்ற அனைவர்களுஞ் செல்வத்தோடு வாழக்கடவது, உமையவளாகிய பெரியநாயகியார் என்னைத தனது சந்நிதானத்தில்வைத்துத் திருநோக்களித்தமாத்திரத்தில் யான் தெரிந்துகொண்டதுபோலவே எல்லோருந் தெரிந்துகொண்டுவாட்டமில்லாமல் வாழக்கடவது.=எ-று. (௱)

விஞ்ஞானசாரம் - முற்றிற்று.





மூன்றாவது

# சுத்தசாதகம்.

காப்பு.

பாயிரம்.

## ஆழத்துப்பிள்ளையார்துதி.

ஞானமானவையோரைத் * துதிக்கையாலெடுத்துமேலாம்
ஆதாரமானவந்த வருளினிலிருக்கவைக்கும்
தாதாவாய்விருத்தவெற்பிற் றங்கியேபிரகாசிக்கும்
பாதாளத்தானைபாதம் பணிந்துபோற்றிடுதல்செய்வாம்;

(இதன்பொருள்,)

வஞ்சகமாகியமருள்வடிவத்தையுடைய முமூட்சுத்வம்பெற்றுள்ள சுத்ததேகிகளைத் தும்பிக்கையாலெடுத்து மேன்மைபொருந்தியஆதாரமான அந்த அருள்வடிவத்தைப் பெற்றிருக்கும்படிவைத்தருளுகின்ற பிரபுத்வமுடையவராய் விருத்தாசலத்திலெழுந்தருளி விளங்கும் ஆழத்துப்பிள்ளையாரது திருவடிகளைவணங்கித் தோத்திரஞ்செய்வாம்=என்றவாறு. (க)

## வேறு - விருத்தாசலேஸ்வரர்துதி.

அருமறையுச்சிதனில்விளங்குவதா யனாதியாயமலன்மற்றமலை, இருவர்க்குநிகழ்ச்சியாயந்தவிறைவற் கிதயமாயிலிங்கரூபமதாய், ஒருகிரிவடிவாய்க்கோடுமுடியனந்த முடையதா யுலகெங்கு நிறைவாய்த் திருமுதுகிரியென் றொருபெயர்படைத்த தேவைநாடொறுமிறைஞ்சிடுவாம்,

(இ-ள்,)=அருமையாகிய வேதங்களினுச்சியிற்பிரகாசிப்பதாகவும் அனாதியாகவும் சிவஞ் சத்தியாகிய இருவருக்குஞ் சுகானந்தஸ்தானமாகவும் அந்தச்சிவத்துக்கு இருதயஸ்தானமாகவும் சூக்ஷ்ம ரூபமாகவும் ஒப்பற்றமலைவடிவமாகவும் அனந்தங் கொடுமுடிகளை யுடையதாகவும் எங்கும்பரிபூரணசொரூபமாகவும் விளங்குகின்ற அழகியவிருத்தகிரியென்று திருநாமம்பெற்றுள்ள விருத்தாசலேஸ்வரரைத் தினந்தோறும் வணங்குவாம்,=எ-று. (உ)

* துதிக்கை - ஸ்தோத்திரஞ்செய்கை.

## பெரியநாயகியார்துதி.

மரகதவடிவுமதித்திருமுகமு மலர்க்குழலுங்குறுநகையும்,கரகமலமுங்கூர்விழியுஞ்செவ்வாயுங் கச்சணிதனமுநூலிடையும், அரகரவென்போர்க்களித்திடும்பதத்தோ டஞ்சலென்றென்னெதிர்தோன்றி,உரகதியளித்தபெரியநாயகியை யுளத்தினிலிருத்திவாழ்த்திடுவாம்

(இ-ள்,)=மரகத ரத்நம்போன்ற திருவுருவமும் பூரணச் சந்திரன் போன்றதிருமுகமும் புஷ்பமாலைகளையணிந்த அளகபாரமும் புன்சிரிப்பும் கைத்தாமரைகளும் கிருபைமிகுந்தநேத்திரங்களும் செவந்த வாயும் கச்சணிந்த ஸ்தனங்களும் நூல்போன்ற மருங்குலும் அரகரவென்று ஸ்தோத்திரஞ்செய்கின்ற அடியார்களுக்கனுக்கிரகஞ்செய்யுந்திருவடிகளும் பிரகாசிக்கும்படி என்னெதிரில் பிரத்தியட்சமா யெழுந்தருளிவந்து அஞ்சாதேயென்று முத்தியின்பத்தைக்கொடுத்தருளிய பெரியநாயகியம்மையாரை இருதயத்தில்வைத்துஸ்தோத்திரஞ் செய்குவாம்,=எ-று. (௧)

இதுவுமது,

பங்கயன்திருமாற்கரியதோர்பரமன் பங்கியேபெரியநாயகியே,சங்கைகளிலதாய்த்தடைகண்மற்றிலதாய்த் தத்துவமசிக்கருத்தமதை, அங்கையினெல்லியெனவிளக்குவதா யமலையேயுனக்கிதயமதாம்,துங்கநன்னெறியொன்றுளத்தினும்விளக்கித்தொண்டனேன்வாக்கினுமுரைப்பாய்,

(இ-ள்,)=பிரமவிஷ்ணுக்களுக்கும் அறிதற்கரிய பரமசிவத்தினது வாமபாகத்தைப்பெற்றிருப்பவளே பெரியநாயகியம்மையாரே சாமவேதத்திற்கூறப்படும்தத்துவமசிவாக்கியத்தின்யதார்த்தமானபொருளைச் சங்கைகளில்லாததாகவும் வேறுதடைக ளில்லாததாகவும் உள்ளங்கைநெல்லிக்கனிபோல விளக்கிவைப்பதாகவும் உனக்குச்சம்மதமாகவும்இருக்கின்ற திடம்பொருந்திய ஒருநன்மார்க்கத்தை நிருமலையாகிய பராசத்தியே அடியேனதுஉள்ளத்திலும் பிரகாசிக்கச்செய்து என்வாக்கிலுமிருந்து ஓர்நூலாகத்திருவுளம்பற்றியருளுவாய்,=எ-று

## நூல்வரலாறு.

உலகிலெச்சமயங்களுமுரைத்திடுதற் கொருவிரோதங்களுமின்றி,இலகுமச்சமயங்களுக்குமேலாகியிலங்கிடுமுபசிடநெறியை,அலகிலெம்மண்ணலருளியங்கையுன் னகத்திலும்விளக்கிவாக்கினிலும்,குலவிடவுரைப்பேமென்றனள்விருத்தக் குன்றில்வாழ்பெரியநாயகியே.

(இ-ள்,)=பூமியின்கணுள்ள எந்தச்சமயங்களுஞ் சொல்லப்படுவதற்கு ஒருவிரோதங்களுமில்லாமல் பிரகாசிக்கின்றஅந்தச்சமயங்களுக்

கெல்லாமேலாகவிளங்கும் உபநிஷத்துமார்க்கத்தை அளவுபடாதமகிமையையுடைய எமதுபரமசிவன் எமக்குபதேசித்தபிரகாரம் உன்மனத்திலும்விளங்கச்செய்து உன்வாக்கிலுமிருந்து ஓர்நூலாகவுஞ்சொல்லியருளுவோமென்று விருத்தகிரியில்வாழ்கின்ற பெரியநாயகியம்மையார் திருவுளம்பற்றியருளினார்,=எ-று.                     (௫)

இதுவுமது,

பெரியநாயகிதற்கருணையாலிங்குப் பிராரத்தமும்மொழிந்தோர்க்குத்
திரிவதாமாயாவடிவதுகரைந்து திருவருளேவடிவாக
அரியவாஞ்சாமத்தசியுரைப்படியே யமைத்திந்தச்சுத்தசாதகத்தைத்
தெரிவிலாவெளியேன்வாக்கினினின்று திருவுளம்பற்றியதிதுவே,

(இ-ள்,)=பெரியநாயகியம்மையார் தனதுதிருவருட்பிரசாதத்தால் இந்தவுலகத்தின்கண் ஆகாமியசஞ்சித கன்மங்களொழிந்ததன்றிப் பிராரத்தகன்மங்களுமொழிந்துநின்ற சுத்ததேகிகளுக்கு மாறுபடுவதாகிய மருள்வடிவமானது கர்ப்பூரதீபம்போற்கரைந்துதிருவருளேவடிவமாகவிளங்குநிமித்தம் அருமையாகிய சாமவேதமகாவாக்கியத்திற்கூறப்படும் அசிபதார்த்தப்பிரகாரமமைத்து இந்தச்சுத்தசாதகமென்னுநூலை அறிவில்லாத எளியேனது வாக்கிலுமிருந்து திருவுளம்பற்றியருளின திதுவேயாகும்,=எ-று,                     (௬)

பாயிரம் - முற்றிற்று.

---

## நூல்.

ஈசனதுரையுங்கிரியையதென்று மியற்றிடுமுபாசனையென்றும்
பாசமதகன்றசுத்தமதென்றும் பகர்ந்திடுமூன்றுகாண்டமதாம்
நேசநற்கிரியைசைவம்வைதிக நிகழ்ந்திடுமுபாசனைசுத்தம்
ஆசில்சிவாத்துவிதமிவைமூன்று மடங்கிடுந்தத்துவமசியே,

(இ-ள்,)=ஈச்சுரவாக்கியமாகிய வேதங்களும்கிரியாகாண்டமென்றும்அன்புசெய்யப்படும் உபாசனகாண்டமென்றும்பாசப்பற்றுக்களின்றியஞானகாண்டமென்றுஞ்சொல்லப்படுகின்ற மூன்றுகாண்டங்களாம்அவற்றுள் அன்புருவமாகியநல்லகிரியாகாண்டமானதுஆகமசம்பந்தமாகியசைவமும் பிரகாசிக்கின்ற உபாசனகாண்டமானது வேதசம்பந்தமாகிய வைதிகமும் ஞானகாண்டமானது குற்றமற்றசிவாத்துவிதமுமாகும் இந்தமூன்றுதன்மையுந் தத்துவமசிவாக்கியத்தில் அடங்கிநிற்கும்,=எ-று,                     (௭)

கிரியையினெறியை யிலங்கிடவியம்புங் கிளர்தந்திரமெழுநான்கும்
அரியநல்லுபாசனாநெறியதனை யறைந்திடுமறையொருநான்கும்
உரியவச்சுத்தநெறிதனையுரைக்கு முபநிடச்சுருதியெண்ணான்கும்
கிரியைதொம்பதந்தற்பதமுபாசனையக் கேடில்சுத்தம்மசிபதமே,

(இ-ள்,)=பிரகாசிக்கின்ற இருபத்தெட் டாகமங்களும் கிரியாமார்க்கத்தைத் துலக்கமாகச்சொல்லும். சதுர்வேதங்களும்அருமையாகிய நல்லஉபாசனாமார்க்கத்தைச்சொல்லும். முப்பத்திரண்டுபநிஷத்துக்களும் உரித்தாகிய அந்தஞானமார்க்கத்தைச்சொல்லும். ஆதலால்கிரியாமார்க்கந் தொம்பதமும் உபாசனாமார்க்கந் தத்பதமும் நாசமில்லாதஞானமார்க்கம் அசிபதமுமாகும்,=எ-று. (அ)

இருக்குமுன்னான்கின்முடிவிலெண்ணான்காயிலகிடுமுபநிடமவையே
வருக்கமுமிரண்டாம் பூருவமென்றும் வயங்கிடுமுத்தரமென்றும்
சுருக்கமதின்றி யத்தியான்மீகஞ் சொற்றிடும்பூருவபாகம்
திருக்குகளின்றி யங்கலிங்கயிக்கஞ் செப்பிடுமுத்தரபாகம். (கூ)

(இ-ள்,)=இருக்குவேதமுதலிய சதுர் வேதாந்தத்தில் முப்பத்திரண்டுபநிஷத்துக்கள் பிரகாசிக்கும் அவைகள் பூர்வபாகமென்றும் பிரகாசிக்கின்ற உத்தரபாகமென்று மிரண்டுவகையாம் பூர்வபாகமானது சுருக்கமில்லாமல் விரிவாக அத்தியான்மீக முத்தியைச்சொல்லும் உத்தரபாகமானது மாறுதலில்லாமல் அங்கலிங்கைக்கியமுத்தியைச்சொல்லும்,=எ-று, (கூ)

முத்தியாமிடத்தும்முதலென்றே மொழியுமாகமமுமங்கொன்றும்
அத்தியான்மீகமறையுபநிடமு மவனியில்வழக்கமேயன்றிப்
பத்தியாலடையுமங்கலிங்கயிக்கம் பகர்ந்திடுமுபநிடமொன்றும்
அத்தினாலிவையிலடக்கமதென்ப ரதைவிளக்கிடுந்தொந்தத்தசியே.

(இ-ள்,)=முத்தியடையுமிடத்தில் பதி-பசு-பாசமென்னு மூவகையுமுண்டென்கிற ஆகமசித்தாந்தமு மொருவகையாம் கூடஸ்தபிரமாயிக்யமுத்தியைப் பிரதிபாதிக்கும் வேதசித்தாந்தமும் பிரபஞ்சத்தில் வழங்கிவருவதேயாம். அன்புமிகுதியா லடையும் அங்கலிங் கைக்யத்தைச்சொல்லும் உபநிடதசித்தாந்தமுமொருவகையாம். அதனால்அதைப்பிரகாசிப்பிக்குந் தொந்தத்தசிவாக்கியமானது இவற்றுளடங்கியிருக்கிறதென்று அறிஞர்கள்சொல்லுவார்கள்.=எ-று, (ய)

சைவநன்னெறியுந்தந்திரமவையுந் தற்பரன்முகத்தினின்றுதிக்கும்
துய்யவைதீகமும்மறையவையுஞ் சுவாசமற்றதனினின்றுதிக்கும்
உய்யுமச்சிவாத்துவிதநெறியதுவு முபநிடமும்முளத்துதிக்கும்
ஐயமுந்திரிவுமறவிவைக்கருத்த மறைந்திடுந்தத்துவமசியே,

(இ-ள்,)=நன்மைமிகுந்த சைவமார்க்கமும் இருபத்தெட்டாகமங்களும் பரமசிவத்தின்முகத்திலிருந்துதோன்றும் பரிசுத்தமான வைதிகமார்க்கமும் சதுர்வேதங்களுஞ் சுவாசத்திலிருந்துதோன்றும்உஜ்ஜீவிக்கின்ற அந்தச் சிவாத்துவிதமார்க்கமும் முப்பத்திரண்டுபநிஷத்துக்களும் இருதயத்திலிருந்துதோன்றும். இவற்றிற்குச் சந்தேகவிபரீதங்களகலும்படி தத்துவமசிவாக்கியமானது அர்த்தத்தைப் போதிக்கும்,=எ-று. (௰௧)

ஆகமமிருபத்தெட்டினின்முடிவா மர்கமம்வாதுளமதனில்
ஏகமென்றியம்புமறையனுசரித்தே யியம்பிடுநான்மறையவையில்
பாகமதுறுஞ்சாமத்தின்முன்னெறியும் பகர்சிவாத்துவிதவந்நெறியும்
யூகமதிலங்கவியம்பிடுமதனா லுண்மைசாமத்தினின்முடிவே,

(இ-ள்,)=இருபத்தெட்டாகமங்களுள் இறுதியாகிய வாதுளாகமத்தில் ஒன்றென்றுகூறப்படும் ரகசியத்தையனுசரித்துச்சொல்லுகின்ற சதுர்வேதங்களுள் பாகமாகிய சாமவேதத்தில் அத்தியான்மீகமாகிய பூர்வபாகமும் வழங்குகின்ற சிவாத்துவிதமாகிய உத்தரபாகமும் யுத்திக்கொவ்வும்படி உதகரிக்கப்படும் அதனால்சாமவேதத்தி னுத்தரபாகமே யதார்த்தமாகும்,=எ-று, (௰௨)

பந்தமதகன்றுசுத்தமாயிருத்தல் பரமமாமுத்தியதென்றும்
அந்தநல்லதிட்டானம்மதுதானே யாகுதன்முத்தியதென்றும்
நந்தலில்சிவத்துக்கங்கமாயிருத்த னன்குறுமுத்தியதென்றும்
தந்திரமறையுபநிடமிம்மூன்றுஞ் சாற்றுந்தாற்பரியநீகேட்பாய்,

(இ-ள்,)=சகலபாசங்களு மொழிந்து விலட்சணமாகிச் சுத்தாத்மாவாய்ப் பிரகாசிப்பதேமுத்தியென்றும் நலமாகிய அவ்வதிஷ்டானப்பிரமமே தானாகப்பிரகாசிப்பதே முத்தியென்றும் நாசமின்றியசிவமே அங்கியாகவும் ஆன்மாவாகியதானே யங்கமாகவும்பிரகாசிப்பதேமுத்தியென்றும் ஆகமம்-வேதம்-உபநிஷதமாகிய இம்மூன்றிலும் பிரதிபாதிக்கும் அதன்தாற்பரியத்தை நீகேட்பாயாக,=எ-று. (௰௩)

பந்தமதுறுமான்மாவையேநோக்கிப் பந்தநீங்குதன்முத்தியென்றும்
அந்தநற்சுத்தான்மாவையேநோக்கி யவ்வதிட்டானநீயென்றும்
நந்தலில்பரமானவனையேநோக்கி நற்சிவத்தங்கநீயென்றும்
தந்திரமாதிமூன்றுகாண்டமதுஞ் சாற்றிடுமிவைதொந்தத்தசியே,

(இ-ள்,)=பாசவசத்தனாகிய ஜீவாத்மாவைப்பார்த்துப் பாசநீங்குவதே முத்தியென்றும் அங்ஙனமான சுத்தாத்மாவைப் பார்த்து அந்த அதிஷ்டானப்பிரமம் நீயாகப்பிரகாசிப்பதே முத்தியென்றும் நாசமி

ன்றிய பிரமமாகிய ஞாநாத்மாவைப்பார்த்து நலமிகுந்த சிவத்துக்கங் கமாய்ப் பிரகாசிப்பதே முத்தியென்றும் கிரியாகாண்டமுதலியமூன் றுகாண்டங்களிலுஞ் சொல்லப்படும்இவையேதொந்தத்தசிவாக்கிய மாகும்.=எ-று. (யச)

முன்பதசிருட்டிப்பதிபசுபாச மூன்றையுமனுதியாய்கிறுவும்
பின்பதசிருட்டிச்சகமித்தையந்தப் பிரமமேயுளதெனகிறுவும்
சின்பதமானவசிபதசிருட்டிச் சிவசத்திலீலையாய்கிறுவும்
மன்பதமூன்றும்பின்னையபினையு மாசறுசிவமுமென்றுணர்வாய்,

(இ-ள்)=தொம்பதார்த்தமானது பதிபசுபாசமூன்றும் அனுதியாக ச்சொல்லும் தத்பதார்த்தமானது ஜகத்துமித்தையாகவும் அந்தப்பிர மமே சத்தியமாகவுஞ்சொல்லும் ஞானபதமான அசிபதார்த்தமான து சர்வமும் சிவசத்திலீலையாகச்சொல்லும் நிலைபெற்ற இம்மூன்றுப தங்களும் பின்னே அபின்னே நிஷ்களமாகிய சிவம்என்றறிவாயாக=எ

முன்பதமானதொம்பதப்பசுவே மூடிருணீங்கிச்சுத்தமதாய்ப்
பின்பதமானதற்பதவருளிற் பிறங்குந்தாதான்மியமடைந்தே
சின்பதமானவசிபதசிவத்தைச் சேர்ந்ததற்கங்கமாய்நின்றால்
மன்பரமுத்திமுடிந்ததுவாகு மற்றவைதனினிற்கிற்குறையே,

(இ-ள்)=முதற்பதமாகிய தொம்பதஜீவனுனவன் அனுதியாய்மறை த்துள்ள அஞ்ஞானந்தகார மொழிந்து சுத்தாத்மாவாய்ப் பின்பதமா கிய தத்பதவருளிற் பிரகாசிக்கும் தாதாத்மியத்தைப்பெற்று ஞானப தமாகிய அசிபதசிவத்தைக்கூடி அதற் கங்கமாகப்பிரகாசிக்கின் நிலை யாகிய பரமுத்தியடைந்ததாகும் இஃதொழிந்து அந்தந்தப்பதஅனு ஷ்டானங்களிலேயே சுகித்துநின்றால்குறைவேயாகும்.=எ-று, (யசு)

கங்கையுமிடைச்சேரியு மொன்றுக்கொன்று கைவிட்டதுவிட்ட தொக்கும், இங்ஙனங்குந்தமும்மொருவனுமற் றிடைவிடாததுவிடா தொக்கும், எங்ஙனமவனுமிவனுமற்றிடைவிட்டிடைவிடாதிருத்தலு ங்கூடும், துங்கவவ்வசிக்குப் போந்திடுமருத்தந் தோன்றிடாமறைநெ றியோர்க்கே,

(இ-ள்)=கங்காயாங்கோஷவதி என்னும் வாக்கியப்படி கங்கையும் இடைச்சேரியும் ஒன்றுக்கொன்று கைவிட்டுள்ளது அதுவேவிட்டல ட்சணையாம் இந்தவகையே குந்தாப் பிரவேசந்திஎன்னும் வாக்கியப் படி குந்தமும் அதைவிட்ட புருஷனே அது விடாததாகும் அதுவே விடாதலட்சணையாகும். சோயந் தேவதத்தா என்னும்வாக்கியப்படி

---

* தாதாத்மியம் பிறிவுபடாமை,

அவனே இவனென்பதில் காலம் இடமுதலானவைகளைவிட்டுப் புருஷனைமாத்திரம் விடாமற்கொள்வது விட்டுவிடாதலட்சணையென்றுஎப்படி சொல்லக்கூடும், இதுவும்விடாதலட்சணையேயாகும் வேதமார்க்கத்தையுடையவர்களுக்குப்பரிசுத்தமாகிய அந்தஅசிபதத்திலுண்டாகும் அர்த்தசாரம் விளங்காதாகும்,=எ-று. (௰எ)

சீவனதுபாதியீசனதுபாதி தீர்ந்துசித்திரண்டதுமொன்றே
ஆவதுவிட்டுவிடாதலக்கணையென் றறைந்திடிலுபாதியோரிரண்டும்
மேவலைநீங்கல்விட்டலக்கணையாம்விளங்குஞ்சித்திரண்டதுமொன்றே
ஆவதுவிடாதலக்கணையாகு மவைக்குமேலிலக்கணையின்றும்,

(இ-ள்,)=சீவனது காரியோபாதியேழும் ஈசுரனது காரணோபாதியேழுமொழிந்து கூடஸ்தபிரமமிரண்டும் ஏகமாய்ப் பிரகாசிப்பதே விட்டுவிடாதலட்சணையென்று கூறுமிடத்தில் காரியகாரணவுபாதிகளிரண்டும் பொருந்தா தொழிந்துநிற்றலே விட்டலட்சணையாகும் பிரகாசிக்கின்ற கூடஸ்தபிரமமிரண்டு மேகமாய் அத்துவிதமாக நிற்றலே விடாத லட்சணையாகும் அவைகளுக்குமேல் இலக்கணை யில்லையாம்,=எ-று, (௰அ)

விட்டலக்கணையும்விடாதலக்கணையும் விட்டுவிடாதலக்கணையும்
திட்டமதுறவேதேர்ந்திடிற்பந்தந் தீர்ந்திடல்விட்டலக்கணையாம்
இட்டநல்லதிட்டானம்மதுதானு யிருக்தலேவிடாதலக்கணையாம்
மெட்டறுசிவத்துக்கங்கமாயிருத்தல் விட்டுவிடாதலக்கணையே.

(இ-ள்,)=விட்டலட்சணை விடாதலட்சணை விட்டுவிடாத லட்சணை ஆகியமூன்றையுந் திட்டமாகவிசாரிக்குமிடத்தில் உபாதிநீங்குவதே விட்டலட்சணையாகும் இன்பத்தைத் தருகின்ற அதிஷ்டானப்பிரமந் தானுய்விளங்குதலே விடாதலட்சணையாகும் ஓரளவைக்குமெட்டாத சிவத்திற் கங்கமாயிருத்தலே விட்டுவிடாதலட்சணையாகும்,=எ-று,()

தத்துவமசியென் றுரைக்குமுப்பதத்திற் றகுவன்ன நான்கதாமவையுள், ஒத்துறுதொந்தற்பதமவைதன்னி லொன்றென்றுமசியினிலிரண்டாம், தொத்துதலகன்று சுத்தமாயிருத்த றெல்லதிட்டானந் தானுதல், ஒத்துறுமவையிலொன்றென்றேயசியி லோரிரண்டங்கமுஞ்சிவமே.

(இ-ள்,)=தத்துவமசியென்னும் மூன்றுபதத்தில் தகுதியாகியநான்குவன்னங்களுண்டு அவற்றுள் ஒத்திருக்கின்ற தொம்பதத்திலும் தத்பதத்திலும் ஒவ்வொருவன்னமேயாம் அசிபதத்தில் இரண்டுவன்னமாகும் ஒருபற்றுக்களுமின்றிக் கூடஸ்தனுயிருத்தலும் பழமையாகி

யதிஷ்டானப்பிரமந்தானாகப்பிரகாசித்தலுமாகும் உடன்பாடாகிய அவ்விருபதத்திலும் ஒவ்வொரு வன்னமே அசிபதத்திலோவென்றால் அங்கமுஞ்சிவமுமாகிய இரண்டு வன்னமாம்.=எ-று. (உ0)

சுத்தமாய்நின்றாலிச்சை சுத்தியதாந்தொல்லதிட்டானமாய்நின்றால்
சித்தமாஞானஞ்சுத்தியதாகுஞ் சிவத்திணுக்கங்கமாய்நின்றால்
மத்தமாங்கிரியைசுத்தியதாகும் வகுத்தவிம்மூன்றுமற்றொழுங்கில்
சித்தமாய்ச்சுத்தியிலாவிடின்மீட்டுந் தேகமொன்றெடுக்குமென்றுண
(ர்வாய்.

(இ-ள்,)=கூடஸ்தசொரூபமானால் இச்சாசத்தியும் ஆகாமிய கன்மமும்-ஆணவமலமும்-நீங்கும் பழமையாகிய அதிஷ்டான பிரமசொரூபமானால் உண்மையாக ஞானசத்தியும் சஞ்சிதகன்மமும் மாயாமலமும்நீங்கும் சிவத்துக்கங்கமாகப் பிரகாசித்தால் களிப்பாகிய கிரியாசத்தியும் பிராரத்தகன்மமும் கன்மமலமும்நீங்கிவிடும் வகுக்கப்பட்ட இம்மூன்றுசத்திகளும் முறைமையாய்அடியோடுநீங்காவிட்டால் திரும்பவுஞ் சரீரமொன்றெடுக்குமென் றறிவாடாக,=எ-று, (உக)

தொம்பதம்விளங்கின்மேல்வினைமறைத்ததொல்லிருளகன்றுபோயொளிக்கும், தம்பதமானதற்பதம்விளங்கிற் சஞ்சிதமாயைபோயொளிக்கும், அம்பதமானவசிபதம்விளங்கி லரும்பிராரத்தம்போ யொளிக்கும், செம்பரவருளேவடிவதாயான்மாச் சிவத்திணுக்கங்கமாய் நிகழும்,

(இ-ள்,)=துவம்பதமாகிய ஜீவப்தம்விளங்கினால் ஆகாமியகன்மமும் அநாதியாகிய ஆணவமலமு மொளித்துவிடும் தத்பதமாகிய ஈசுரபதம்விளங்கினால் சஞ்சிதகன்மமும் மாயாமலமு மொளித்துவிடும். அழகியபதமாகிய அசிபதம்விளக்கினால் அரிதாகிய பிராரத்த கன்மமும் கன்மமலமுமொளித்துவிடும் அதற்குமேல்ஆன்மாவானதுசெம்மையாகிய திருவருளே வடிவமாய்ச் சிவத்துக்கங்கமாகப் பிரகாசிக்கும்,=எ-று. (உஉ)

அடுத்தமற்றிரண்டுசென்னத்தில்வீட்டை யடைந்திடுந்தொம்பதநெறியோர், அடுத்தமற்றொருசனனத்தில்வீட்டையடைந்திடுந்தற்பதநெறியோர், அடுத்தவிச்சனனந்தனிலடைந்திடும்வீடசிபதநெறியுளோரிவரும், அடுத்தவிவ்வுடலோ டடைந்திடாவிடின்மே லாக்கையொன்றெடுக்குமென்றுணர்வாய்,

(இ-ள். =தொம்பதஅனுஷ்டானிகள் அடுத்துவரும் இரண்டுபிறப்பில் முத்தியடைவார்கள் தத்பதஅனுஷ்டானிகள் அடுத்துவரும்ஒரு பிறப்பில் முத்தியடைவார்கள், அசிபதஅனுஷ்டானிகள்அடுத்துள்ள

இப்பிறப்பிற்றானே முத்தி யடைவார்கள் இவ்வகையானவர்களும் எடுத்துள்ள இந்தச்சரீரத்தோடு முத்தியடையாவிட்டால் மேலுமொருசரீர மெடுப்பார்களென்றறிவாயாக.=எ-று, (உங)

ஒடுங்கிடுங்காலந்தோன்றினவடைவி னொடுங்கிடுமென்றுரைப்பதனல், ஒடுங்கிடுங்காலஞ்சத்தியவாதிக் கொடுங்குமிவ்வுடறன்மாத்திரையின், ஒடுங்கிடுங்காலமசத்தியவாதிக் கொடுங்குமிவ் வுடலசத்தியமாய், ஒடுங்கிடுங்காலமுடலிங்கே வீழ்ந்தாலொடுங்கினதில்லையென்றுணர்வாய்.

(இ-ள்,)ஒடுங்குங்காலத்தில் உண்டானபடியே ஒடுங்கிப் போமென்றுலகத்திற் பழமொழியாகவழங்கிவருதலால் சத்தியவாதிகளாகிய சித்தாந்தபட்சத்தார் இந்தச்சரீர மொடுங்குங்காலத்தில் தன்மாத்திரையிலொடுங்கிவிடுமென்பார்கள். மித்தியாவாதிகளாகிய வேதாந்தபட்சத்தார் இந்தச்சரீரமொடுங்குங்காலத்தில் மித்தையாகிப்போமென்பார்கள், ஆனால் இந்தச்சரீரமொடுங்குங்காலத்தில் இங்கேவிழுமானல் ஒடுங்கினதில்லையென் றறிவாயாக =எ-று. (உச)

மேலொருவடிவையெடுத்ததேயாகின் மேவுமிவ்வுடலிங்கேவீழும்
மேலொருவடிவையெடுத்ததின்றாகின் மேவுமிவ்வுடலிங்கேவிழா
மேலொருசிவத்தைச்சிவன்சென்றடையுமேவுமிவ்வுடலிங்குத்தானே
மேலொருசிவத்தின்வடிவதாமருளாம் வெளியதாயுலகுகண்டிடவே.

(இ-ள்,)=மேலும் ஒருசரீரத்தையெடுத்ததுண்டானல்எடுத்துள்ள இந்தச்சரீரமிங்கேவிழும் மேலும் ஒருசரீரத்தைஎடுத்ததில்லையானல் எடுத்துள்ள இந்தசசரீரமிங்கேவிழாது மேலாகிய ஒப்பற்ற சிவத்தைஆத்மாவானது அடையும். அவ்வாத்மா பொருந்தினின்ற இந்தச்சரீரம் இவ்விடத்தில்தானே உலகம் பிரத்தியட்சமாகக் கண்டுவக்கும்படி மேன்மைபொருந்திய சிவசொரூபமான அருள்வடிவமாகப் பிரகாசிக்கும்.=எ-று. (உரு)

சூக்குமமதனினின்றுமுன்வினையிற் றூலதேகமுமுளதாகும்
சூக்குமந்தனதுகாரணமடையிற் றூலமுஞ்சூக்குமத்தடையும்
சூக்குமந்தனதுகாரணமடையத் தூலமிங்ககன்றதேயென்றால் (வாய்
சூக்குமந்தனதுகாரணம்விடுத்துத் தூலமொன்றெடுத்ததென்றுணர்

(இ-ள்,)=சூட்சும சரீரத்திலிருந்து பழவினையால் தூலசரீரமுண்டாகும் சூட்சுமசரீரமானது தனதுகாரணமாகிய சிவத்தைச்சேருமானல் தூலசரீரமுஞ் சூட்சுமசரீரத்தைச் சேரும் சூக்குமசரீரமாத்திரம் தனதுகாரணமாகிய சிவத்தைச் சேர்ந்திருக்கத் தூலசரீரமட்டும்

இங்கேவிழுந்ததென்று சொன்னால் சூட்சுமசரீரமானது தனதுகாரணமாகிய சிவத்தைவிட்டு நீங்கித் தூலசரீரமொன் றெடுத்ததென்று அறிவாயாக.=எ-று. (உசு)

தூலவிவ்வுடலைவிடுத்துநில்லாது சூக்குமஞ்சூக்குமம்விடுத்துத்
தூலநில்லாதிதிரண்டையும்விடுத்துத்தொல்லுயிர்நிலாவுயிர்விடுத்து
தூலசூக்குமங்கணின்றிடாதுயிருஞ் சூக்குமமும்முடிவடைந்தால் (த்
தூலமுமுடிவையடைந்திடாதிந்தத்தொல்லுலகினில்விழுந்திடுமோ

(இ-ள்,)=இந்தத்தூலசரீரத்தைவிட்டுச் சூட்சுமச்சரீரம்நிற்காது சூட்சுமசரீரத்தைவிட்டு ஸ்தூலசரீரம்நிற்காது இவ்விரண்டையும் விட்டுப்பழமையாகிய வுயிர்நிற்காது. உயிரைவிட்டு ஸ்தூல சூட்சுமங்கள் நிற்காது. உயிருஞ் சூட்சுமமுங்காரணமாகிய சிவத்தைச் சேருமாயின்ஸ்தூலசரீரமுமுடிவைப்பெறாமல்இந்தப்பழையபூமியின்கண்விழுந்துவிடுமோ விழாது,=எ-று. (உஎ)

வினையினிலெடுத்தவிவ்வுடன்மேலும் வினையுளதெனிலிங்கேயகலும்
வினையிலதெனிலிங்கிவ்வுடறுனே வினையறுமோமயமாகி (போல்
வினையுளவுடல்போற்றோற்றன்மாத்திரமாய் விளங்கியேவெந்துறுபுரி
வினையிலாப்பரமமுத்தியில்வெளியாய் விமலநல்லருளதாய் விடுமே.

(இ-ள்.)=வினைப்போகத்தால்வந்த இந்தச்சரீரமானது மேலும்வினைப்போகமிருக்குமாயின் இங்கேவிழும் வினைப்போகமிலதாயின்இப்பூமியின்கண் இந்தஸ்தூலசரீரமே ஒரு வினையுமின்றிய பிரணவவடிவமாகி வினைப்போகமுள்ள சரீரத்தைப்போலத் தோற்றன்மாத்திரமாய் வெந்தகயிற்றைப்போலப் பிரகாசித்து, ஒருசெய்கையுமில்லாத பரமுத்தியில் ஆகாசமாய் நிஷ்களமாகிய அருள்வடிவமாகப் பிரகாசிக்கும்,=எ-று. (உஅ)

சிவசிற்றறிவுமிம்முத்தவறிவாய்த் திகழ்ந்திடி னுடன்மருள்வடிவும்
தாவருமோங்காரவ்வடிவாகுந் தக்கசீவன்முத்தவறிவும்
மேவரும்பரமுத்தவ்வறிவாகில் விளங்குமோங்காரவவ்வடிவும்
ஓவலிலந்தவருள்வடிவாகு மொழுங்கிதேயென்றுணர்ந்திடுவாய்,

(இ-ள்.)=சீவனது சிற்றறிவும் சீவன்முத்தவறிவாய்ப்பிரகாசிக்கின் அக்கணமே மருள்வடிவமாகிய இந்தச்சரீரமும் கணித்தற்கரியபிரணவவடிவமாகும். தகுதியாகிய சீவன்முத்த வறிவும் அடைதற்கரிதான பரமுத்தவறிவாயின் விளங்குகின்ற அந்தப்பிரணவவடிவமும் பூரணமாகிய அந்த அருள்வடிவமாய்விடும் இதுவே ஒழுங்கென் றறிவாயாக,=எ-று, (உகூ)

பிராரத்தமுடன்பாடென்றெந்தநெறியும்பேசிடுமிந்நெறியதற்குப்
பிராரத்தமுடையோராருகரேயன்றாம் பிராரத்தம்புசித்திடுவோர்கட்
கருதிந்தமாயாதனுகரணங்களதனினாற்சிவத்துவமதனை (யேர
உறாதுமற்றவரைச்சீவன்முத்தர்களென்றுரைத்திடப் படுவதெப்படி

(இ-ள்,)=பிராரத்தகன்மம் உடன்பாடென்று எந்தமார்க்கத்திலுஞ் சொல்லப்படும். இந்தமார்க்கத்துக்குப் பிராரத்தமுடையவர்கள் உரியவர்களேயல்ல. பிராரத்தமனுபவிப்பவர்களுக்கு இந்தமாயையாகிய தனுகரணபுவனபோகங்கள் நீங்காது. அந்தவகையால் சீவன்சிவத்துவத்தைப்பொருந்தாது அப்படிப்பட்டவர்களைச் சீவன் முத்தர்களென்று சொல்லப்படுவதெப்படியோ,=எ-று, (௫௰)

அன்னைதன்முலைப்பாலருந்திடும்பருவ மகன்றப்பாற்பருவம்வந்தத
ற்பின், அன்னைதன்முலைப்பாலருந்தவேண்டிடினு மம்முலைவற்றியே
யிடும்போல், பின்னையின்போகம்புசித்திடும்பருவம் பெயர்ந்தப்பாற்
பருவம்வந்ததற்பின், பின்னையின்போகம்புசிக்கவேண்டிடினும்பிரார
த்தநீங்கியேயிடுமால்.

(இ-ள்,)=தாயினது ஸ்தனாமிர்தத்தைப்புசிக்குஞ் சைசவப்பருவநீங்கிக் குமாரப்பருவம்வந்தபின்பு தாயினது ஸ்தனாமிர்தத்தைப் புசிக்க விரும்பினாலும் அந்தஸ்தனம் பாலின்றிவறண்டுபோகும் அதுபோல மாயாகாரியமாகிய விடயபோகத்தையனுபவிக்கும் பருவநீங்கி அறிவானந்தத்தை யனுபவிக்குஞ்சீவன் முத்திப்பருவம் வந்தபிறகு மாயாகாரியமாகிய விடயபோகத்தை யனுபவிக்க விரும்பினாலும் பிராரத்தகன்ம மில்லாமற்போய்விடும்,=எ-று, (௫௧)

இந்தநல்லொழுங்கின்முன்னிருபதமு மெய்தியிவ்வசிபதத்தடைந்
தால்,பந்தமில்சிவத்தைவடிவொடுமடையும்பகுத்தவையொன்றிலொ
ன்றொதுங்கிச், சந்ததந்தருக்கியசிபதத்தருத்தந் தனைத்தத்தம்பதத்தி
னிலொடுக்கும், அந்தகர்தமக்குமற்றொருக்காலு மசிபதமுத்தியே கி
டையா,

(இ-ள்,)=இந்தச்சுத்தமார்க்கத்தினால் தொந்தத்தாகிய இரண்டுபதத்தையும்பெற்று இந்தஅசிபதத்தைப்பெற்றால் ஒருபற்றுமின்றிய சிவத்தைச் சரீரத்தோடுமடைவன். மேற்கூறிய அப்பதங்களொவ்வொன்றில் அப்பியசித்திருந்து சதாகாலமுஞ் செருக்கடைந்து அசிபதார்த்தத்தை அந்தந்தப்பதங்களி லடக்கிக்கூறும் ஞானக்குருடர்களுக்கு ஒருக்காலத்திலும் அசிபதமுத்திகிடையாதாகும்,=எ-று, இதற்குதாரணம்-தாயுமானவர்-சத்தாகிநின்றோர்சடங்களிலிங்கமென வைத்தா

ருமுண்டேயென் வாழ்வேபராபரமே, சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா
ருடற்றீபம் வைத்தகர்ப்பூரம்போல் வயங்கும்பராபரமே, (௩௨)

முத்தியிற்சிவமுமுயிரிரண்டாகின் முத்திசாயுச்சியமின்றாம்
முத்தியிற்சிவமுமுயிருமொன்றாகின் முத்தியேபெற்றவனின்றாம்
முத்தியிற்சிவத்துக்குயிரங்கமாகின்மொழியுமற்றவையுண்டாமதனன்
முத்தியிற்சிவமுமுயிருஞ்சையோகமொழியுந்தாதான்மியங்குறையே

(இ-ள்,)=முத்திபெறுமிடத்தில் சிவமுமுயிரு மிரண்டுபடுமாயின் முத்திசாயுஜ்யமில்லை முத்திபெறுமிடத்தில் சிவமுமுயிருமொன்றுபடுமாயின் முத்திபெற்றவனில்லை முத்திபெறுமிடத்தில் சிவத்துக்கு உயிரங்கமாயிருப்பின்சொல்லுகின்றஅவ்விருதன்மையு முண்டாகும் அந்தவகையினால் முத்தி பெறுமிடத்தில் பிரமகூடஸ்த வைக்கியத் தைக்கூறுந் தாதாத்மியங் குறைவேயாம்.=எ-று, (௩௩)

சச்சிதானந்தத்தற்பரசிவமே தனதுதன்னிலையிலேநிற்க
அச்சிதானந்தலீலையினாலே யனேகமாய்ச்சராசரமாகிச்
சச்சிதானந்தமேயுடல்பொறிகட்கு கரணங்களாய்க்கொண்டே
அச்சிதானந்தலீலையினடித்து மடைந்திடும்பண்டையப்படியே.

(இ-ள்,)=சச்சிதானந்தசொரூபமாகிய பரமசிவம்- தனது இயற்கையிலிருந்தபடியிருக்க அந்த ஞானந்த விலாசத்தினால் அனேகமான சராசரவுயிர்களாகித் தனது சச்சிதானந்த வுருவே தேகேந்திரியகரணங்களாகக்கொண்டு அந்த ஞானந்தவிலாசத்தினால் நடித்திருந்தும் பின்பு முன்போலவே தன்னியற்கைநிலையி லடைந்து பிரகாசிக்கும்,=எ-று, (௩௪)

ஏகமாயசையாத்தற்பரலிங்கமி லீலையிற்சரமனேகமதாய்
மோகமாமிருளாயவ்விருளதனின் மூடமாய்ச்சிறிதுநாளிருந்துஞ்
சோகமாமிந்தமருளதாயதனிற் றுவக்குண்டுசிறிதுநாணடித்தும்
பாகமாமோவாயதிற்சின்னாணடித்தும் பண்டுபோனின்றிடுமன்றே,

(இ-ள்,)=ஏகருபமாய் அசலமாகிய பரமசிவம், தனதுலீலாவிபூதியால் அனேகவுயிர்களாகி மோகங்கொண்ட இருள்வடிவமடைந்து அந்த இருள்வடிவத்தில் சிறிதுகால மூடமாயிருந்தும் துக்கமாகியஇந்த மருள்வடிவமடைந்து இதிற் சிறிதுகாலம் அலைப்புண்டு கிடந்தும் இதற்குமேல் பரிபாகமாகிய பிரணவவடிவமா யிருந்து அதிற்சிறிது காலம் நடித்திருந்தும் பின்புமுன்போலவே பிரகாசிக்கும்,=எ-று,()

சலமதுதானேதிரண்டுப்பதாயச் சலம்வந்துட்புகவந்தச்சலமாய்
நிலமதின்விளங்குமஃதினைப்போல நிமலமாம்ருவருடானே
குலவுலீலையினாற்றிரண்டுருவாகிக் கூறின்றிக்கூறதாய்நடித்தும் (யே
இல்கண்மாத்திரமாய்நடித்துமுன்போலு மிருந்திடும்பண்டையப்படி

(இ-ள்,)=ஜலமே உப்பாகத்திரண்டுநின்று அந்தச்சலம்வந்துபுகுந் தமாத்திரத்தில் ஜலமாகவே பூமியிற்றோற்றப்படும் அதுபோல நிரு மலமாகிய அருவமான அருட்சொருபமே தன்னிடத்துண்டான லீ லாவிபூதியாற்றிரண்டு உருவமாகிய மருள்வடிவமாய்க் கூறுபாடின் றிக் கூறுபாடாகநடித்தும் தோற்றன்மாத்திரமாகிய பிரணவ வடிவ மாய்நடித்தும் பின்பு பழையபடி அருள்வடிவமாகவே பிரகாசிக்கும்.

சரமந்தவிருளிலிருந்திடுங்காலைத் தனுமுதனான்குமவ்வருளாம்
சரமந்தமருளினடித்திடுங்காலைத் தனுமுதனான்குமம்மருளாம்
சரமந்தவோவினடித்திடுங்காலைத் தனுமுதனான்குமவ்வோவாம்
சரமந்தவருளினின்றிடுங்காலைத் தனுமுதனான்குமவ்விருளே,

(இ-ள்,)=உயிரானது அந்தஇருள்வடிவிலிருக்குங்கால்தனுமுதலிய நான்கும் அந்தஇருள்வடிவமேயாம் உயிரானது அந்தமருள்வடிவில் நடிக்குங்கால் தனுமுதலிய நான்கும் அந்தமருள்வடிவமேயாம் உயி ரானது அந்தப்பிரணவவடிவில்நடிக்குங்கால்தனுமுதலியநான்கும்அ ந்தப்பிரணவவடிவமேயாம் உயிரானது அந்தஅருள்வடிவிற்பொருந் துங்கால் தனுமுதலியநான்கும் அந்தஅருள்வடிவமேயாம்,=எ-று.()

இருள்வடிவதுவுமருள்வடிவதனி லெய்தியேமறைந்திடுமிந்த
மருள்வடிவதுவுமோவடிவதனின் மறைந்திடுமோவடிவதுவும்
அருள்வடிவதனின்மறைந்திடுமந்த வருள்வடிவதுவுமச்சிவத்தில்
தெருள்வடிவானசத்தியாய்முன்போற் றிகழுமென்றசியுரைத்திடுமே,

(இ-ள்,=இருள்வடிவமானதுமருள்வடிவத்திற்பொருந்தி மறைந்து போகும் இந்தமருள்வடிவமானதுபிரணவவடிவத்தின் மறைந்துபோ கும் பிரணவவடிவமோவென்றால் அருள்வடிவத்தின்மறைந்துபோ கும் அங்ஙனமறைந்து அந்தச்சிவத்தினிடத்து ஞானசொரூபமாகிய சிற்சத்தியாய்ப் பழையபடிபிரகாசிக்குமென்று அசிபதத்திற் கூறப்ப டும்,=எ-று. (நஅ)

அருளுறுவடிவேமுன்னியல்பான்மா வாணவவிருளுறுமன்றே
இருளுறுசுழுத்திவிழுங்கிடுமதனுக் கிங்கமாயையின்சிருட்டியதாம்
மருளுறுகனவுவிழுங்கிடுமதற்கு வந்ததுபிரணவசிருட்டி
தெருளுறுமந்தப் பிரணவம்விழுங்கத் திகழுமவ்வருட்சிருட்டியதே,

(இ-ள்,)=அருள்வடிவமே ஆன்மாவிற்குப்பழைய நிலைமையாகும் அவ்வான்மா ஆணவமலமாகிய இருள்வடிவத்திற் பொருந்தின பொ ழுதே அதன்கண்ணுள்ளசுழுத்தியவத்தைவிழுங்கிவிடும் அதற்குமே ல்அந்தஆன்மாவுக்கு மாயாமலமாகிய மருள்வடிவமுண்டாகும்அங்

னமானபொழுது மப்பக்கமிருந்த சொப்பனவஸ்தை விழுங்கிவிடும் அவ்வான்மாவிற்குச் சிவகடாட்சத்தினால் பிரணவவடிவமுண்டாகும் அந்தஞானசொரூபமாகியபிரணவம் விழுங்கினதினால் அந்தஆன்மா அருள்வடிவமாகிவிடும்,=எ-று, (ஙகூ)

மருள்வடிவதனி னீங்குதலின்றி மற்றுமொன்றறிவிலாக் குழந்தை வெருவருங்குமாரந் தருணமூப்பென்றே விளங்குதல்போலவான்மாவும், அருள்வடிவதனினீங்குதலின்றி யாணவமாயையோவருளாய்ப் பருவமேற்றவையிலந்தந்தவடிவாய்ப்பண்டுபோன்முடிவினின்றிடுமே

(இ-ள்,)=மருள்வடிவமாகிய இந்தவுடலினின்றுநீங்காமலிருந்து ஒன்றுமறியாத குழந்தைப்பருவமும் வெருவுதலின்றிய குமாரப்பருவமும் யௌவனபருவமும் விருத்தபருவமும் தோற்றுதல்போல ஆத்மாவும் அருள்வடிவத்தில்நீங்காமலிருந்து இருள்வடிவமும் மருள்வடிவமும் பிரணவவடிவமும் அருள்வடிவமுமாகி அந்தந்தப் பருவத்தில் அந்தந்தவடிவமாய்த்தோற்றப்பட்டு முடிவில் பழையபடியே பிரகாசிக்கும்,=எ-று. (சய)

இருளினிற்பகுப்பின்றியசடமயமா மிம்மருளுதயமதாகின்
உருவதாம்பஞ்சபூதமேமயமா மோவொளியுதயமதாகின்
உருவருபஞ்சாக்கரமதேமயமா மோங்கருளுதயமதாகின்
அருவதாம்பஞ்சசத்தியேமயமா மாருயிர்வடிவமென்றுணர்வாய்,

(இ-ள்,)=ஆன்மவடிவமானது இருள்வடிவத்தில் ஒருபகுப்பு மில்லாத சடமயமாகவும் இந்தமருள்வடிவம் வந்தபொழுது உருவமாகியபஞ்சபூதமயமாகவும் பிரணவவடிவம்பிரகாசிக்குமானால் உருவாருவமாகிய பஞ்சாட்சரமயமாகவும் மேலாகிய அருள்வடிவம்பிரகாசிக்கின் அருவமாகிய பஞ்சசத்திமயமாகவும் விளங்குமென்று அறிவாயாக,=எ-று. (சக)

வடிவதவ்விருளதாய்நிற்குங்காலே மன்னுயிர்பசுவதாய்நிற்கும்
வடிவதிம்மாயையாய்நிற்குங்காலே மன்னுயிர்சீவனாய்நிற்கும்
வடிவதவ்வோவதாய்நிற்குங்காலே மன்னுயிர்சீவன்முத்தனுமாம்
வடிவதவ்வருளதாய்நிற்குங்காலே மன்னுயிர்பரமமுத்தனுமாம்.

(இ-ள்,)=நிலைபெற்றஆன்மவடிவமானது அந்தஇருளாய்நிற்குமிடத்துப் பசுவாயிருக்கும் இந்தமருளாய்நிற்குமிடத்துச்சீவனாயிருக்கும் அந்தப்பிரணவமாய்நிற்குமிடத்துச் சீவன்முத்தனாகவும் அந்த அருளாய்நிற்குமிடத்துப் பரமுத்தனாகவும் பிரகாசிக்கும்,=எ-று. (சஉ)

இருளுறுபசுவதாய்நிற்குங்காலே யிருளதுவாகியேநிகழும்
மருளுறுசீவனாய்நிற்குங்காலே மருளதுவாகியேநிகழும்

தெருளுறுமோவின் முத்தனுங்காலைத் தெருள்பிரணவமதாய்நிகழும்
அருளுறுபரமமுத்தனுங்காலை யருளதாய்நிகழுமவ்வருளே.

(இ-ள்,)=அந்தஅருளானது இருளிற்பொருந்திய பசுவாயிருக்குமிடத்து இருளாகவேவிளங்கும் மருளிற்பொருந்திய சீவனு யிருக்குமிடத்துமருளாகவேவிளங்கும் ஞானமாகிய பிரணவத்திற் பொருந்திய சீவன்முத்தனுயிருக்குமிடத்து ஞானரூபமாகிய பிரணவமாகவே பிரகாசிக்கும் அருளிற்பொருந்திய பரமுத்தனுயிருக்குமிடத்துஅருளாகவேபிரகாசிக்கும்,=எ-று. (௪௫)

இருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை யிரும்பதியாகியேநிகழும்
மருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை மகபரமாகியேநிகழும்
தெருள்பிரணவமாய்நிகழ்ந்திடுங்காலைச் சிவலிங்கமாகியேநிகழும்
அருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை யச்சிவமாகுமச்சிவமே,

(இ-ள்)=அந்தப்பரசிவமானதுஇருளாய்ப்பிரகாசிக்குமிடத்துப்பெருமைதங்கிய பதியாகப்பிரகாசிக்கும் மருளாய்ப் பிரகாசிக்குமிடத்து மகத்தாகியபரமாகப்பிரகாசிக்கும் ஞானமாகிய பிரணவமாய்ப்பிரகாசிக்குமிடத்து உருவாருவமாகிய சிவலிங்கமாகப் பிரகாசிக்கும் அருளாய்ப்பிரகாசிக்குமிடத்து அந்தப்பரசிவமாகவேபிரகாசிக்கும்,எ-று

அரியவவ்வருளேமூன்றியல்பதுவு மைந்துநற்குறியுமாய்நிகழும்
இரியுதலில்லாச்சத்தையாய்ச்சித்தா யின்பமாய்நிற்குதலியல்பாம்
கிரியையுஞானமுமிச்சையதுவுங்கிளர்திரோதையும் பரையதுவும்
உரியதுகுறியாம்விரியிலையைந்தா யொடுங்கிடிலொன்றதாய் நிற்கும்,

(இ-ள்,)=அருமையாகிய அந்த அருட்சொரூபமே மூன்றியல்பும் மேன்மைபொருந்தியஐந்துகுறிகளுமாய்ப்பிரகாசிக்கும்அவையாதெனின்நாசமில்லாத சத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் பிரகாசிக்குதல் இயல்பாகும் கிரியாசத்தியும் ஞானசத்தியும் இச்சாசத்தியும் பிரகாசிக்கின்ற திரோதாசத்தியும் பராசத்தியுமாகப் பிரகாசிக்குதல் குறியாகும் அத்தியாரோப யுத்தியால்விரிவாகுமிடத்து இருபத்தைந்தாகி அபவாதயுக்தியா லொடுங்குமிடத்து ஒன்றாகவே விளங்கும்.

பிரணவமதுவுமூன்றியல்பதுவும் பிறங்குமைங்குறியுமாய்நிகழும்
திரமுறுமவ்வுமுவ்வுமவ்வதுமாய்த் திருந்தவேநிற்குதலியல்பாம்
உரமுறுநவ்வுமவ்வுமச்சிய்யு மோங்கியவவ்வும்யவ்வதுவும்
விரவுறுகுறியாம்விரியிலையைந்தாய் மேவிடிலொன்றதாய்நிற்கும்,

(இ-ள்,)=பிரணவவடிவமானதுமூன்றியல்பும்பிரகாசிக்கின்றஐந்து குறிகளுமாய்ப்பிரகாசிக்கும்அவையாதெனின்நிலைபெற்ற அகாரமாக

வும் உகாரமாகவும் மகாரமாகவும் பிரகாசிக்குதல் இயல்பாகும் ஞானசொரூபமாகிய நகாரமும் மகாரமும் சிகாரமும் உயர்வாகியவகாரமும் யகாரமுமாகச்சேர்ந்திருத்தல் குறியாகும் விவகரிக்கில் இருபத்தைந்தாகி ஒடுங்குமிடத்தில் ஒன்றாகவேவிளங்கும்,=எ-று. (சசு)

மருளுறுமாயையதுவுமூன்றியல்பும் வகுக்குமைங்குறியுமாய்நிகழும்
உருவுறுதமசுரசசுசத்துவமா யொன்றியேநிற்குதலியல்பாம்
பிருதிவியுஞ்சலமும்மனலதுவும் பெருகியவாயுவும்வானும்
வருகுறியாகும்விரியிலேயைந்தாய் வந்தொடுங்கிடிலொன்றாய்நிற்கும்

(இ-ள்,)=மயக்கமிகுந்தமருள்வடிவமானதுமூன்றியல்பும்பகுக்கப்பட்டஐந்துகுறிகளுமாய்ப்பிரகாசிக்கும்அவையாதெனின்உருவமாகிய தமோகுணமாகவும் ரஜோகுணமாகவும் சத்துவகுணமாகவும் பொருந்திநிற்றல் இயல்பாகும் மண்ணாகவும் நீராகவும் நெருப்பாகவும் பெருகியகாற்றாகவும் ஆகாயமாகவும் பொருந்தியிருத்தல் குறியாகும் விவகரிக்குமிடத்து இருபத்தைந்தாகி ஒடுங்குமிடத்தில் ஒன்றாகவே தோற்றப்படும்,=எ-று. (சஎ)

ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு மாகியவருளதேயருவாம்
ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு மாகியவோவருவுருவாம்
ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு மாகியமாயையேயுருவாம்
ஐந்துநற்குறியுமூன்றியல்பதுவு மாகியவிவைவிலூணுளவாம்,

(இ-ள்,)=நலமாகியஐந்துகுறியும் மூன்றியல்புமாகிய அருள்வடிவமானது அருவமாகும், ஐந்துகுறியும் மூன்றியல்புமாகிய பிரணவ வடிவமானது உருவாருவமாகும, ஐந்துகுறியும் மூன்றியல்புமாகியமருள்வடிவமானது உருவமாகும். ஐந்துகுறியும் மூன்றியல்புமாகியவிவற்றில் உணவுபேதம் இருக்கின்றனவாம்,=எ-று, (சஅ)

உருவமாமுணவேயெதிரதாமுபய முளத்தினிலுருசிமாத்திரமாம்
அருவமாமுணவேதிருத்தியாத்திரமா யறிவினில்விளங்கிடுமந்த
உருவமாமுணவேசீவருக்குரித்தா முபயமிம்முத்தருக்குரித்தாம்
அருவமாமுணவேயம்முத்தருக்கு ரித்தாமெனவறைந்திடுமசியே,

(இ-ள்,)=உருவமாகிய புசிப்பானது எதிர்பட்ட உருவமாகத்தோற்றும். உருவாருவமாகிய புசிப்பானது ருசிமாத்திரமாய் இருதயத்திற் பிரகாசிக்கும், அருவமாகிய புசிப்பானது திருப்திமாத்திரமாய் அறிவிற் பிரகாசிக்கும், உருவப்புசிப்பானது சீவர்களுக்குரியதாகும் உருவாருவப்புசிப்பானது சிவன்முத்தருக்குரியதாகும், அருவப்புசிப்பானது பரமுத்தருக்குரியதாகுமென்று அசிபதத்திற்கூறப்படும்-எ

உருவமாமுணவாலுருவமாமுபய வுணவினாலுபயமேமயமாம்
அருவமாமுணவாலருவமேமயமா மச்சிவாங்கிசன்வடிவதுவே
உருவமாமுணவாற்சீவனுமுபய வுணவினாற்சீவன்முத்தனுமாம்
அருவமாமுணவாற்பரமமுத்தனுமா மச்சிவாங்கிசனுயிரதுவே,

(இ-ள்,)=சிவாம்சம் பெற்றவனது வடிவமானது உருவப்புசிப்பினால் உருவமயமாகும்; உருவாருவப்புசிப்பினால் உருவாருவமயமாகும் அருவப்புசிப்பினால் அருவமயமாகும்; அவனதுஉயிரானது உருவப்புசிப்பினால் சீவனாகும் உருவாருவப்புசிப்பினால் சீவன்முத்தனாகும் அருவப்புசிப்பினால் பரமுத்தனுமாகும்,=எ-று, (ருய)

அன்னியதசையையருந்துதன்மனிதர்க்கடாதுமற்றதையருந்திடுவோர்
அன்னியமிருகாதிகளெனவறைய லாகுமற்றதிற்சிவாங்கிசரும்
அன்னியமாயாவுணவருந்திடுத லடாதுமற்றதையருந்திடுவோர்
அன்னியமாயாசகிதசீவர்களென் றறைந்திடலாகுமென்றுணர்வாய்,

(இ-ள்,)=அன்னியமாகிய மாமிசத்தைப்புசித்தல் மனிதர்களுக்குத்தகாது அதைப்புசிப்பவர்களை அன்னியமாகிய மிருகபட்சிகளென்றேசொல்லப்படும் அதுபோலச் சீவன் முத்தனும் அன்னியமாகிய மாயாபோகங்களை யனுபவிப்பதுதகாது அதை அனுபவிப்பவர்களை மாயாசகிதஜீவர்களென்றே சொல்லப்படுமென் றறிவாயாக,=எ-று,()

அசுத்தவிவ்வுணவேபுசித்திடுமளவு மசுத்தவாதனையதுநீங்கி (ம்
அசுத்தவத்தையினைவிழுங்கிடுஞ்சுத்தவவத்தைவந்தடைதலேயிலையா
அசுத்தவிவ்வுணவைச்சுத்தமதாக வகத்தினிர்ப்பாவனைசெய்தால் (ம்
அசுத்தவிநினைவுநீங்கியந்நினைவை யகத்தினிற்பொருந்தியேநிற்கு

(இ-ள்,)=அசுத்தமாகிய இந்த வுணவைப் புசிக்குமளவும் அசுத்தவாசனைநீங்கி அசுத்தாவஸ்தையை விழுங்குகின்ற சுத்தாவஸ்தைவந்தடைவதில்லை, அசுத்தமாகிய இந்தவுணவை அறுதியாகமனத்திலும் பாவிக்காதிருந்தால் இந்த அசுத்தநினைவுநீங்கி மனத்திற்சுத்தநினைவு பொருந்தியிருக்கும்,=எ-று, (ருஉ)

திரிவிதகுணத்திற்றமதமோகந் திகழுமிராசதமிராகம்
உரியசத்துவமேஞானமதாகு முலகிலிம்முக்குணவுணவே
விரியுமற்றவையிலெவைபுசித்ததுவோ விளங்கிடுமக்குணமல்லால்
அரியசுத்தவத்தையடைவதேயிலையவ் வவத்தைவந்துறும்வகைகேட் (பாய்,

(இ-ள்,)=மூன்று குணங்களுள் தாமதகுணம் மோகமும் விளங்குகின்ற இராசதகுணம் ஆசையும்உரித்தாகிய சத்துவகுணம் ஞான

மூமாகும் இந்தமுக்குணப்புசிப்பே உலகத்திற்பரவிநிற்கும் அவற்றில் எந்தப்புசிப்பைப் புசித்ததோ அந்தக்குணமே மேலிடுமல்லாமல் அரிதாகிய சுத்தாவஸ்தைவந்து பொருந்துவதில்லை அந்தச்சுத்தாவஸ்தைவந்து பொருந்தும்வகைகேட்பாயாக,=எ-று, (ருரு)

அன்னைதன்வயிற்றிற்புசித்தவக்குணமா யாக்கையும்பொறியுமம்மனமும், மன்னியும்பினுமப் புசிப்புமேன்மிகவும் வாஞ்சையுற்றருந்தியேயுழலும், உன்னலும்பொறியுமுடலுமிம்மூன்று மொத்திடுமெனத்தெளிந்துணர்ந்து, தன்னதுள்ளவையிலுருருசிதிருத்தி தனில்வயிராகமேயாகும்,

(இ-ள்,)=உயிரானது தாய்வயிற்றிற்புசித்த புசிப்பின்குணமாகவே சரீரமும் இந்திரியங்களும் மனமும் பொருந்துவ தல்லாமலும் அக்குணப்புசிப்பினிடத்தேமிருந்தவாஞ்சைகொண்டுபுசித்து அலையும்-மனம்-இந்திரியம் சரீரமாகிய இந்தமூன்றும் உடன்பாடாகவே யிருக்குமென்று தெளிந்தறிந்து தனதுள்ளத்தின்கண் உருவ ருசிதிர்ந்தியில்வைராகம்பெற்றுநிற்கும்,=எ-று, (ருசா)

உலகினில்விடய விச்சையையுடையோ னுணவதற்கேற்கவேகூட்டி, இலகிடப்புசித்தான் முபற்சிமேன்மேலு மேறியேவளர்ந்திடுமதுபோல்,குலவிடும்வீட்டிச்சையேயுடையோன்கொண்டதற்கேற்கவேயுணவை, இலகிடப்புசித்தான் முயற்சிமேன்மேலுமேறியேவளர்ந்திடுமென்றே,

(இ-ள், =உலகத்தில் விடயவிருப்பமுடையவன் அதற்கொவ்வும்படியான உணவுகளைச் சேகரித்துப்புசித்தால்விடயமுயற்சியானதுமேலும்மேலும் அதிகரித்துவளரும் அதுபோல பிரகாசிக்கின்றமோட்சவிருப்பமுடையவன் கொண்டகொள்கைக்குத்தக்கபடி உணவுகளைப் புசித்தால் மோட்சமுயற்சியானதுமேலுமேலுமதிகரித்துவளரும்,எ

தமகுணப்புசிப்பேமயக்கத்தையளிக்குந் தகுமிராசதகுணப்புசிப்பே மமதையையளிக்குஞ்சத்துவப்புசிப்பே மயககமுமமதையுமகற்றி அமலநல்லுணர்வேயளித்திடுமதனு லவையிரண்டினுநசையகற்றி நிமலசத்துவமேவருத்தனையாக நின்றுசத்துவப்புசிப்பருந்தும்,

(இ-ள்.)=தமோகுணப்புசிப்பானது மயக்கத்தைக்கொடுக்கும் தகுதியாகிய ரஜோகுணப்புசிப்பானது மமதையைக்கொடுக்கும் சத்துவகுணப்புசிப்பானது மயக்கத்தையும் மமதையையுமொழித்துப் பரிசுத்தமாகிய நல்லறிவைக்கொடுக்கும அத்தன்மையினுல் அந்தத்தாமதராசத குணப்புசிப்புகளில் விருப்பமொழிந்து நிருமலமாகியசத்துவகுணமே வளரும்படிநின்று சத்துவகுணவுணவைப்புசிக்கும்=எ-று,

அடிசின்முன்னுரைக்குமறுசுவையனைவையையருந்திடுகாலையினேக்கிற்
கடினமுமுறைப்புமிராசதமலைவயிற் கழிந்திடும்புராதனமூசன்
மடிவுறு தமசென்றிருமையுமகற்றி மாலைகாலைப்பொழுதகற்றிக் (ல்,
கடினவுச்சியிற்சத்துவகுணப்புசிப்பேனைக்கொண்டுதினமருந்திடுமா

(இ-ள்,)=சாதமுதலிய அறுவகையுண்டியைப்புசிக்குமிடத்துவிசாரிக்கில் கடினபதார்த்தமும் உறைப்புப்பதார்த்தங்களும்இராசதவுணவாகும் அவற்றுட்கழிந்த பழையபதார்த்தங்களும் மூசலானபதார்த்தங்களும் சோம்பைத்தருகின்ற தாமதவுணவாகும் இதையறிந்து அவ்விரண்டுகுணவுணவையுந் தள்ளிமாலைப்பொழுதையுங்காலைப்பொழுதையும்விட்டுக் கடினமாகிய உச்சிப்பொழுதில் சத்துவகுணப் புசிப்பையே கையேற்றுத்தினமும்புசிக்கும்,=எ-று, (ருஎ)

இடம்பொருளேவன்மூன்மையுமுடையோர்க்கிக்கையுணவுறுமந்த
இடம்பொருளேவன்மூன்றையுமகன்றோர்க்கித்தகையுணவுறுகதனு
திடம்பெறவூரினுச்சியிலேகித் திருவருள்புசிப்பித்ததென்றே (ல்
விடம்பெறினுங்கைப்பெற்றதையருந்தில்விமலமாய்நின்றிடுஞ்சித்தம்

(இ-ள்,)=இடம்-பொரு-ளேவலாகிய மூன்றையு முடையவர்களுக்கு இவ்வகைப்பட்ட வுணவுகிடைக்கும் அந்த இடம் பொருளேவலாகிய மூன்றையும் விட்டொழிந்தவர்களுக்கு இவ்வகைப்பட்ட உணவு கிட்டாதுஅதனுல் திடச்சித்தமாய் தான்வசிக்கும்ஊரினிடத்தில் உச்சிக்காலத்திற்சென்று திருவருளே புசிப்பித்ததென் றெண்ணி விஷத்தைப்பெற்றபோதிலும் அதைக்கையேற்றுப் புசிக்குமாகில் சித்தமானது நிருமலமாகப்பிரகாசிக்கும்,=எ-று. (ருஅ)

தந்திரகிரியைநெறிதனிலீசன் றந்திடப்புசிக்கும்பின்மறைசொல்
அந்தநல்லுபாசனநெறிதனி லனைத்துநாமெனக்கண்டுபுசிக்கும்
இந்தவவ்வுணவின்மாறுபாடின்றி யிருமையுமுடிந்ததேயாகின்
தொந்தமில்சிவமேசடுமுகமாகத் தொக்கிருந்தருந்தன்மேனினைவாம்

(இ-ள்,)=ஆகமமாகிய கிரியாமார்க்கத்தில் ஈசுரன் கொடுத்ததாகப் புசிக்கும் வேதமாகிய அந்த வுபாசனமார்க்கத்தில் சர்வமும் நாமே யெனக்கண்டுபுசிக்கும் இந்தவுணவுகளில் மாறுதலில்லாமல் அந்தஇரண்டுமார்க்கமும் முற்றுப்பெறுமாகில் ஒரு தொந்தமுமில்லாத பரமசிவமே *சடுமுகமாகக் கூடியிருந்து புசித்தலின்மாத்திரம்நினைவாகும்,=எ-று, (ருகூ)

இருவகைநெறியும்வரவுபோக்குடைத்தா யியங்கிடுமிதுவன்றிமாயை
ஒருமுதலென்றுமித்தையதென்று முனைத்திடுகிட்டையும்விகற்ப

* சடுமுகம்-என்பது பஞ்சேந்திரியமும் மனமும்

நிருவிகற்பமுமாய்நிகழ்ந்திடுஞ்சகச நிட்டையெக்காலையுமின்றென்று
றொருவிமற்றவையைச்சகசநிட்டையனாயுலகெங்குந்தேடியேயிடுமா

(இ-ள்,)=இரண்டு மார்க்கமும் வரத்துப்போக்குடையதாக விளங்கும் இதுவல்லாமல் மாயையையொருமுதலென்கிற ஆகமசித்தாந்தமும் மித்தையென்கிற வேதசித்தாந்தமுஞ்சொல்லப்பட்ட நிஷ்டைகளும் சவிகற்பமாகவும் நிருவிகற்பமாகவும்பிரகாசிக்கும் சகசநிஷ்டையானது எந்தக்காலத்திலு மில்லையென்று அவற்றைவிட்டொழிந்து சகசநிஷ்டையுடைய மகான்களை உலக முழுவதும் எந்தவிடத்திலுந் தேடித்திரியும்,=எ-று, (௯௧)

முன்புறுநிட்டைசவிகற்பமாகி முத்தியின்மூன்றுநின்றிலகும்
பின்புறுநிட்டைநிருவிகற்பமதாய்ப் பிரமமற்றொன்றுநின்றிலகும்
வன்புறந்நிட்டையிருமையுமுறினும் வரவுபோக்குடையதாய்நிகழும்
இன்புறுநிட்டைசகசமதாகி யிலங்கிநின்றிடுநின்றபடியே.

(இ-ள்,)=முன்னாகிய தொம்பதநிஷ்டையானது சவிகற்பமாய்முத்தியில் பசுபதிபாசமாகிய மூன்றும்பிரகாசிக்கும் பின்னாகிய தத்பதநிஷ்டையானது நிருவிகற்பமாய் ஏகமானபிரமமாத்திரமாய்ப் பிரகாசிக்கும் வன்மையாகிய அவ்விருவகை நிஷ்டைகளைப்பெற்றபோதினும் வரத்துப்போக்குடையதாகவே பிரகாசிக்கும் இன்பமயமாகிய அசிபதநிஷ்டையானது சகசமாகி இருந்தபடியேயிருந்து பிரகாசிக்கும்-எ-

சவிகற்பநிருவிகற்பநிட்டையதுஞ் சத்துவகுணத்தில்வந்ததுவாம்
இவிகற்பநீங்கிவருடமாயிரமங் கிருந்திடினும்பினும்விழிக்கும்
செவிதினிலடையுஞ்சகசநிட்டையதே திருவருட்டனினில்வந்ததுவாம்
தவிருதல்கூடலின்றியேயங்குத் தங்கிநின்றிடுநின்றபடியே,

(இ-ள்,)=சவிகற்பநிஷ்டையும் நிருவிகற்பநிஷ்டையுஞ்சத்துவகுணத்திலுதித்ததாகும் இந்த விகற்பங்களனைத்துமொழிந்து ஆயிரம்வருஷகாலஞ் சமாதியிலிருந்தபோதிலுந் திரும்பவுஞ்ஸ்மரிப்புண்டாகும் செவ்வையாகப் பெறுஞ்சகசநிஷ்டையோவென்றால் திருவருட்பிரசாதத்தினாற் சித்தித்ததாகும் விடுதல் பற்றுதலில்லாமல் அந்தவருளிற் பொருந்திஇருந்தபடியேயிருக்கும்,=எ-று. (௯௨)

சகசநன்னிட்டையியல்புதம்முயற்சி சற்றொன்றுமின்றியேயருளால்
சகந்தரும்போகமதுவுந்தம்முடலுந் தருகரணமுமெனவையனைவையாய்
அசமதிலுதித்தன்றுமறையாம லகன்றதுபின்னாகியாமல்
அகமுனைகாயவருத்தமேயின்றி யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

(இ-ள்,)=சகசநிஷ்டையின் தன்மையானது தமதுமுயற்சி ஒருசிறிதுமில்லாமல் திருவருட்பிரசாதத்தினால் புவனமும்-போகமும் தமதுசரீரமும் தகுந்த கரணமுமாகிய எப்பொருள்களும் அவ்வருண்மயமாகி இருதயத்திலுதயமான அருட்சொரூபமறையாமலும்மறைந்துபோன கிரிசியங்கள் திரும்பவுமுதிக்காமலும் மனோவாக்குக்காயப்பிரயாசமின்றி லபித்து இருந்தபடியேயிருக்கும்,=எ-று. (௬௩)

அருளண்டமாகிலுயிர்பிண்டமாகுமண்டமுந்தோற்றன்மாத்திரமாய்
அருள்நின்றதாகிற்பிண்டமுமதுபோ லாகியேநின்றிடுமண்டம்
அருள்வடிவாகிற்பிண்டமுமுயிரா யருளிற்றாதான்மியமடையும்
அருள்ந்தச்சிவத்துக்கங்கமதாகி யமர்ந்துநின்றிடுநின்றபடியே,

(இ-ள்,)=அருளானது அண்டமாகப்பிரகாசிக்கில் உயிரானது சரீரமேதானாயிருக்கும். அண்டமுந் தோற்றன்மாத்திரமாகி அருளேபிரகாசிக்குமானால் சரீரமும் அண்டம்போலவே தோற்றன்மாத்திரமாயிருக்கும், அண்டமும் அருள்வடிவமாகப்பிரகாசிக்கில் சரீரமும் உயிராகி அருள்வடிவத்திற்கணைந்து தாதாத்மியத்தைப்பெறும் அவ்வருளானது சிவத்துக்கங்கமாகப் பொருந்தி இருந்தபடியேயிருக்கும்;எ

இருளினிலிருந்து பருவம்வந்ததற்பி னியற்றிடுமுயற்சியொன்றின்றி
மருளினிலடைந்துமருள்வடிவாகி வயங்கிடுஞ்சகசமேபோல (நி
மருளினிலிருந்தும்பருவம்வந்ததற்பின் வருந்திடுமுயற்சியொன்றின்
அருளினிலடைந்திங்கருள்வடிவாகி யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

(இ-ள்,)=உயிரானது இருள்வடிவத்திலிருந்தும்பருவம்வந்தபின்பு செய்யுமுயற்சி ஒன்றுமில்லாமல் மருள்வடிவத்தைப்பெற்று மருள்வடிவமாகிச் சகசமாய்ப்பொருந்தியிருக்கும் அதுபோல மருள்வடிவத்திலிருந்தும் பருவம்வந்தபின்பு வருந்துகின்ற ஒருமுயற்சியுமில்லாமல் அருள்வடிவத்தைப்பெற்று அருள்வடிவே சகசமாய்ப் பொருந்தி இருந்தபடியேயிருக்கும்,=எ-று (௬௫)

மருள்வடிவதற்குமதனைதானென்றே மன்னுஞ்சீவனுக்கு மாதரவாய்
மருள்வடிவமுதம்புசித்திடுமதுவே வயங்கிடுமற்றதையொருவி
அருள்வடிவமுதமுறிட வருந்தி யஃதுமிச்சீவனுக்கணைந்தே
அருள்வடிவதுவுஞ்சிவாங்கிசனு மா யமர்ந்துநின்றிடுநின்றபடியே.

(இ-ள்,)=மருள்வடிவத்துக்கும் அதைதானென்றபிமானித்திருக்குஞ்சீவனுக்கும் ஆதரவாய் மருள்வடிவாகிய அன்னபானாதிகளைப் புசிக்கும் அவ்வுணவேபொருந்தியிருக்கும் அதையொழித்து அருள்வடிவாகிய அமிர்தஞ்சுரக்க அதைப்புசித்து அந்தவமிர்தமும் இந்தச்சிவ

னுங்கரைந்து அருள்வடிவமும் சிவாம்சனுமாகப் பொருந்தி இருந்த படியே யிருக்கும்,=எ-று, (சுசு)

சாக்கிரமதனினிற்குந்தத்துவத்திற் சாற்றுங்கேவலத்தினிற்சிறிது
நீக்கிமற்றதற்குநிற்குந்தத்துவத்தை நிறுத்துதல்போலநின்மலமாம்
சாக்கிரமதனினீக்குதலின்றித் தத்துவமனைத்துஞ்சுத்தத்தில்
ஆக்கியேநிறுத்துந்திருவருளதனு லடைந்துநின்றிடுகின்றபடியே,

(இ-ள்,)=சாக்கிராவஸ்தையி லிருக்குந் தத்துவங்களில் சொல்லுகின்ற சிலதத்துவங்களைச் சுழுத்தியவஸ்தையிற்கழித்து அச்சுழுத்தியில்நிற்குந் தத்துவத்தை மாத்திரம் நிறுத்துவதுபோல நிருமலமாகிய சாக்கிரத்தில் நீக்குதலில்லாமல் சகல தத்துவங்களையும் ஞானக்கினியிற்றகித்து நிறுத்துந் தன்மையைத் திருவருட் பிரசாதத்தினுற் பொருந்தி இருந்தபடியேயிருக்கும்,=எ-று, (சுஎ)

மருள்வடிவாகியிருந்திடுமிடமு மருளதாய்ப்புசிப்பதுமருளாய்
அருளிதின்மறைந்துநிற்குமென்பதுவு மன்றியேநின்றமுன்போல
அருள்வடிவாகியிருந்திடுமிடமு மருளதாய்ப்புசிப்பதுமருளாய்
மருளிதின்மறைந்துநிற்குமென்பதுவு மாற்றிநின்றிடுகின்றபடியே,

(இ-ள்,)=மருள்வடிவாயிருக்குமிடமும் மருளுணவு புசிப்பதும்மருண்மயமேயாகி அருளானது இந்தமருளிற்கரந்து நிற்குமென்பதுமாகிய நினைவின்றி முன்புசகசமாயிருந்ததுபோல அருள்வடிவாயிருக்குமிடமும் அருளமுதம்புசிப்பதும் அருண்மயமேயாகி மருளானது இந்தஅருளிற் கரந்துநிற்குமென்பதுமாகிய ஸ்புரணமின்றிச்சகசமாய் இருந்தபடியேயிருக்கும்,=எ-று. (சுஅ)

சகசநிட்டையதுலபித்திடுங்காலை தம்முயற்சியதொன்றுமின்றிச்
சகசமதாகித்தம்முளமதனிற் றுனின்றிங்கிடைவிடாதூறும்
சுகவருளமுதமதனையேயருந்தித் தொல்வடிவதுமெள்ளக்கரைந்து
சுகவருள்வடிவாய்ச் சுட்டெலாமருளாய்த் தோன்றிநின்றிடுகின்றபடி (யே.

(இ-ள்,)=சகசநிஷ்டையானது லபிக்குங்காலத்தில் தமது முயற்சியொன்றுமில்லாமல் சகசமாய்த் தமதுஇருதயத்தினின்று இடைவிடாமற்சுரக்கும் இன்பமாகிய அருளமிர்தத்தையேபுசித்து முன்னுள்ளமருள்வடிவமும் மெள்ளமெள்ளக்கரைந்து சுகரூபமாகிய அருள்வடிவமாய் சுட்டுப்பொருளெல்லாம்அருண்மயமாய்ப்பிரகாசித்து இருந்தபடியே யிருக்கும்,=எ-று. (சுகூ)

அருளொளியிச்சையதுதனிலுதிக்கி லசைவறநின்றிடுஞ்சித்தம்
அருளொளிஞானமதுதனிலுதிக்கி லகிலமவ்வருளதாய்த்தோன்றும்

அருளொளிகிரியையதுதனிலுதிக்கி லகத்திநின்றருளமுதூறும்
அருளொளியமுதமருந்தியவ்வடிவா யமர்ந்துநின்றிடுநின்றபடியே,

(இ-ள்,)=அருட்பிரகாசமானது இச்சாசத்தியிற்பிரகாசிக்கில் சித்தமானது அசைவற்றுநிற்கும் அருட்பிரகாசமானது ஞானசத்தியிற்பிரகாசிக்கில் பிரபஞ்சமானது அவ்வருட்பிரகாசமாகவேபிரகாசிக்கும் அருட்பிரகாசமானது கிரியாசத்தியில்பிரகாசிக்கில் இருதயத்திலிருந்து அருளமிர்தஞ்சுரக்கும் அந்தவருளமிர்தத்தைப்புசித்து அருண்மயமாய்ப்பிரகாசித்து இருந்தபடியேயிருக்கும்,=எ-று. (எ௰)

இருளுறுமவத்தையடைந்தெங்குமிருளா யிருந்துபின்விழித்திடல்போலும், அருளுறுமவத்தைபடைந்தெங்குமருளாயமர்ந்துபின்விழித்திடுமென்னில், இருளுறுமவத்தைதமசினலடைந்தே யிராசதத்தாற்பினும்விழிக்கும், அருளுறுமவத்தைசத்துவத்தடைந்தேயந்தராசதத்திற்பின்விழிக்கும்.

(இ-ள்,)=நித்திரையில் இருளவஸ்தைபொருந்தி எங்கு மிருண்மயமாயிருந்து பின்புசாக்கிரத்தில்விழிப்பதுபோலச் சமாதியில் அருளவத்தைபொருந்தி எங்குமருண்மயமாயிருந்து பின்புவிழிக்குமென்று சொல்லுமிடத்தில் தமோகுணத்தினல் இருளவஸ்தைபொருந்தி ரஜோகுணத்தினல் திரும்பவும்விழிக்கும் அருளவஸ்தையோ சத்துவகுணத்திற்பொருந்தி அந்தச்சத்துவகுண ரஜசினல் திரும்பவும் விழிக்கும்.=எ-று. (எக)

மாயையிலடைந்தபின்பிருளவத்த வந்தடையாதுபின்படைதன்
மாயையின்றமசாலாதலாற்போக்கும்வாவுமாய்நிகழ்ந்திடுமதன்மேல்
ஆயவவ்வருளையடைந்தபின்மாயை யடைவதேயிலைபினுமடைந்தால்
ஆயவவ்வருளையடைந்ததேயின்று மடைந்ததுமாயைசத்துவத்தால்,

(இ-ள்,)=மருள்வடிவமாகிய இந்தச்சரீரத்தை யடைந்தபின்பு பிரகிருதியாகிய இருள்வடிவம்வந்துபொருந்தாது பின்பு தினப்பிரளயத்தைப்பொருந்துதல் மருள்வடிவத்தின்தமோகுணத்தினலாகையால் அது போக்கும்வரத்துமா யிருக்கும் அதற்குமேல் சிரேஷ்டமாகிய அந்தஅருள்வடிவத்தைப்பொருந்தினபின்பு மருள்வடிவம்பொருந்துவதேயில்லை அங்ஙனமாகத்திரும்பவும் பொருந்துமாளுல் மேலாகிய அந்தஅருள்வடிவத்தைப் பொருந்தினதேயில்லையாம் அருள்வடிவத்திற்பொருந்தினதும் மருள்வடிவத்தின் சத்துவகுணத்தினலேயாம்.

இருளினிலடைந்துதானுமவ்விருளா யிருந்தங்குநின்றதாயிடினும்
அருளினிலடைந்துதானுமவ்வருளா யமர்ந்தங்குநின்றதாயிடினும்

மருளினிலடைந்தவடிவகில்லாது வடிவதிங்கிருக்தலேதென்னில்
இருளருளவத்தைதனிற்குணபோத மிலங்கியங்கிருத்தலினன்றே,

(இ-ள்,)=இருள்வடிவத்தைப்பொருந்தி உயிரும் அந்தவிருண்மய மாயிருந்து அந்தஇருளவஸ்தைபொருந்திநின்றாலும் அருள்வடிவத் தைப்பொருந்தி உயிரும் அந்தவருண்மயமாயிருந்து அருளவஸ்தை பொருந்திநின்றாலும் இந்தமருள்வடிவம்நிற்காது அங்ஙனமாயின் ம ருள்வடிவமிங்கிருப்பதற்குக்காரணமேதெனின் இருளவஸ்தையிலும் அருளவஸ்தையிலும் குணபோதமிருக்தலினாலிருக்கும்,=எ-று, ()

சத்துவகுணமேவருத்தனையாகித் தங்கியேயுளத்தினுணின்றால்
ஒத்துறுநிட்டைகூடுமிலதே லொருவியிச்சகலகேவலத்தைத்
தொத்துறுமன்றிக்குணமுமாயையினிற் றோன்றினதாதலாலிந்த
ஒத்துறுநிட்டையுண்மையேயன்றாமுபாசகநிட்டையென்றுணாவாய்

(இ-ள்,)=சத்துவகுணமே இருதயத்தில் மேலீடாகிப் பொருந்தியி ருந்தால் ஒத்திருக்கின்ற அந்தநிஷ்டைகூடும் அக்குணம் இல்லையாகி ல் அந்தநிஷ்டையைவிட்டுநீங்கிச் சகலாவஸ்தை கேவலாவஸ்தைகளை ப்பொருந்தியிருக்கும் அல்லாமல் இந்தச்சத்துவகுணமும் மாயையி ற்றோன்றினதாதலால் ஒத்திருக்கின்ற இந்தநிஷ்டையும் உண்மையல் ல உபாசகநிஷ்டையென்றறிவாயாக.=எ-று. (எச)

ஆதலிற்சகலகேவலசுத்த மடைந்திடலிங்குமாயையதாம்
வாதனையொழிந்துங்குணமிருத்தலினிவ் வடிவகன்றிடிற்பினுஞ்சுத்த
சாதமுற்றிடுதலன்றியேவீட்டைத் தானடைந்திடுதலேயின்றாம்
ஏதமிலருளிலுண்மைநிட்டையினை யெய்தினோர்சீவன்முத்தர்களே,

(இ-ள்.)=ஆகையால் சகலகேவல சுத்தாவஸ்தைகளைப் பொருந்து தல் மாயையேயாகும் வாசனைநீங்கியுங் குணமிருத்தலினால் இந்தம ருள்வடிவமொழிந்தாலும் பின்பு சுத்ததேகமெடுக்குமல்லது முத்தி யைப்பெற்றதேயில்லையாம் குற்றமற்ற அருள்வடிவத்தில் உண்மை நிஷ்டையைப்பெற்றவர்களே சீவன்முத்தர்களாகும்,=எ-று, (எரு)

சீவனிம்மாயைதனின்முத்தனருளிற் சீவன்முத்தன்னடுவோவின்
மேவலிற்சீவன்றனக்கந்தவருளு மெய்ம்முத்தன்றனக்குமாயையுமில்
சீவன்முத்தனுக்கேரியின்கணாமீதிற் றிசழ்ந்திடுவோனைப்போற் றோ
ன்றும்,ஆவதுநாகங்கண்கரிதுதிக்கையறிதல்போற்காகங்கண்மணிபோ
(ல்)

(இ-ள்,)=இந்தமருள்வடிவத்தில் சீவனென்றும் அருள்வடிவத்திற் பாமுத்தனென்றும் மத்திபமாகிய இரண்டுவடிவத்தில் சீவன்முத்த னென்றும் பெயர்வழங்கலால் சீவனுக்கு அந்தஅருள்வடிவமும்பா முத்தனுக்கு இந்தமருள்வடிவமுமில்லையாகும்சர்ப்பமானது கண்ணி

னுல் உருவத்தையும் சத்தத்தையும் யானையானது தும்பிக்கையால் பரிசத்தையும் கந்தத்தையும் காக்கையானது ஒருவிழிமணியால் இரண்டுபுறத்திலுள்ள பொருள்களையும் அறிந்துகொள்வதுபோலும் ஏரிக்கரைமேலிருப்பவனுக்கு ஏரியின் அகத்திலும் புறத்திலுமுள்ள பொருள்கள் தோற்றுவதுபோலும் சீவன்முத்தனுக்கு மருள்வடிவமும் அருள்வடிவமுந்தோற்றப்படும்=எ-று. (எசு)

அந்தரவடிவசீவன்முத்தர்களில் வடிசிலைப்புசித்ததேயின்றும்
இந்தவிவ்வுலகிலிதுபுசித்திடுமென் றிந்நெறியோர்களின்றிறைஞ்சித்
தந்திடிலுணவுமளவின்றிப்புசிக்குஞ் சமித்தலுமலமதுமாகா
மந்திரமதனைவடிவதாக்கொண்ட மகிமையிலென்றுணர்ந்திடுவாய்,

(இ-ள்,)=பிரணவவடிவமாகிய சீவன்முத்தர்கள் இந்தஅன்னமுதலியவுணவுகளைப்புசித்ததேயில்லையாம் இந்தவுலகத்தில் இதைஉட்கொண்டருளக்கடவீரென்று இம்மார்க்கத்திலுள்ள அன்பினர் வணங்கி நின்று ஸ்தோத்திரஞ்செய்து படைக்குமிடத்தில் அவ்வுணவை அபரிமிதமாகப்புசித்தருளுவார்கள் மந்திரமாகியஓங்காரத்தையே வடிவமாகப்பெற்றிருக்கிற மகத்துவத்தினுல் அவைகள் ஜீரணித்து மலமுமாகமாட்டாதென்றறிவாயாக,=எ-று. (எஎ)

எங்கெங்குநோக்கின்மருண்மயமாகி யிருந்திடும்பந்தமாந்திசையில்
தங்குந்தன்வடிவமருண்மயமாகித் தயங்கியேநின்றதுகுறிபோல்
எங்கெங்குநோக்கிலருண்மயமாகி யிருந்திடுமுத்தியாந்திசையில்
தங்குந்தன்வடிவமருண்மயமாகித் தயங்கியேநிற்குநல்குறியே,

(இ-ள்,)=எவ்வெவ்விடத்தைப் பார்த்தபோதினும் மருண்மயமாகவேயிருக்கின்ற பெத்தத்திசையில்பொருந்திய தனது வடிவமானது மருண்மயமாகத்தோற்றப்பட்டு நின்றகுறிபோல எவ்வெவ்விடத்தைப்பார்த்தபோதினும் அருண்மயமாகவேயிருக்கின்ற முத்தித்திசையில்பொருந்திய தனதுவடிவமானது அருண்மயமாகப் பிரகாசித்திருப்பது குறியாகும்,=எ-று. (எஅ)

அருள்வடிவதுவேபார்வையிற்றெருக்கில் அகப்படாமிகன்றுநின்றிலகும்
மருள்வடிவதுவேபார்வையிற்றெருக்கில் வசப்பட்டுநின்றிலகும்
அருண்மருணடுவாமோவதுவடிவேயகப்படும்பார்வையொன்றுக்கே
மருள்வடிவுலகுமோவடிவோர்க்குவாய்த்திடும்பார்வையொன்றுக்கே

(இ-ள்,)=அருள்வடிவமானது எக்காலத்திலுந்திருஷ்டிக்கும் பரிசத்துக்கும் அகப்படாமலிருந்துபிரகாசிக்கும் மருள்வடிவமானது திருஷ்டிக்கும் பரிசத்துக்கும்வசப்பட்டு நின்றுவிளங்கும், அருளுக்கு

ம் மருளுக்கும் மத்தியமாகிய பிரணவவடிவமானது பார்வையொன்றுக்குமாத்திரமகப்படும் பிரணவவடிவத்தைப்பெற்ற சீவன்முத்தர்களுக்கு மருள்வடிவமாகியவுலகமும் பார்வையொன்றுக்கு மாத்திரம் அருள்விலாசமாகத்தோற்றும்,=எ-று. (எகூ)

பழுதையிற்கிளிஞ்சில்கட்டையினின்றும் பாம்பும்வெள்ளியுங் கள்வ
னும்போல், எழுதருமாரோபிதமதிட்டான மிலங்கிடில்லாததுபோ
லும், முழுதுணர்சிவம்வந் துநித்தவிச்சீவன் முத்தருக்குலகமின்று
தித்தல், கழுதிரதம்போற் காட்சிமாத்திரமாய்க் கவும்விவகாரமேயி
ன்றும்.

(இ-ள்,)=பழுதையிற்பாம்பும் கிளிஞ்சலில் வெள்ளியும் கட்டையிற்கள்வனும்போலத் தோற்றப்படுகின்ற ஆரோபமானது அந்தஅதிஷ்டானந்தோற்றினவிடத்தில்இல்லாததுபோலும் முழுவதுமுணர்ந்த சிவத்துவமுதயமான இந்தச் சீவன்முத்தர்களுக்கு உலகமில்லை தோற்றப்படுகிறதோவென்னில் பேய்த்தேர்போற் றோற்றமாத்திரமாய்க் காட்சிப்படுவதன்றி விவகரிக்கும்விவகாரமேயில்லையாம்-எ-று

கனவதுபோல்விவகாரமுண்டென்னிற் கனவதுநீங்கியே விழித்தால்
கனவிதென்றுணருமாங்கவர்தமக்கக் கனவுவந்துதவுதலுண்டோ
கனவுமுன்கண்டநினைவுமாத்திரமாய்க் காணுறுமகத்ததுபோலக்
கனவிந்தவுலகுஞ்சீவன்முத்தருக்குக் காணன்மாத்திரமதாய் நிகழும்,

(இ-ள்,)=சொப்பனம்போல விவகாரமுளதாயிருக்குமெனின்சொப்பனநீங்கிவிழித்தவுடன் இதுசொப்பனமென் றறிகின்றவர்களுக்கு அந்தச்சொப்பனத்திற்கண்டபொருள்முதலியவைகள்வந்துதவியாகுதல்உள்ளதோ அந்தச்சொப்பனமும் சாக்கிரத்திற்கண்டநினைவுமாத்திரமாய்மனத்திற்றோற்றப்படும் அதுபோல விரிவாகிய இந்த வுலகமுஞ் சீவன்முத்தருக்குத்தோற்றமாத்திரமாய் விளங்கும்,=எ-று, ()

சொற்பனமதனிற்கனவிதென்றிடுமோர் சொற்பனசாக்கிரமடுவே
நிற்பனபோலுமருண்மருணடுவே நின்றிடும்பிரணவவடிவம்
சிற்பரசீவன்முத்தனவ்வடிவாய்ச் செகமிதுஞ்சிவமதுந்தோன்ற
நிற்பனதனக்குநிழலின்றிநிழற்போ லிலத்தடியின்றியேநிகழும்,

(இ-ள்,)=சொப்பனவஸ்தையில் இது சொப்பனமென் றறிகின்ற சொப்பனசாக்கிரமத்தியிலிருப்பவன்போல ஞானசொருபமாகிய சீவன்முத்தன் அருள்மருள்மத்தியமாகிய பிரணவசொருபமாயிருந்து அந்தச்சொருபமாகவே இந்தவுலகமும் அந்தச்சிவமும் பிரகாசிக்கும்படியிருப்பன் எங்ஙனமெனின் நிழலானது தனக்குநிழலில்லாமலிருப்பதுபோல நிலத்திற்கால்ஊன்றுதலின்றிப் பிரகாசிப்பன்,=எ-று. ()

வெந்துறுபடமும்வறுத்திடும்வித்தும் விளங்கிடுங்கானலிற்சலமும்
இந்திரதனுவுங்கனவிருந்தகன்ற விடமதுமிக்குமுன்னிருந்த
முந்துறுகடமுங்கடமதையெடுத்து முடிந்தபின்றிகிரியிற்சுற்றும்
கந்துறுநகரும்போன்முத்தர்வடிவுங் காட்சிமாத்திரமதாய்திகழும்.

(இ-ள்,)=வெந்தவஸ்திரமும் வறுத்தவித்தும் தோற்றுகின்ற கானற்சலமும் இந்திரதனுசும் கனவிருந்துநீங்கியஇடமும் முன்புபெருங்காயம்வைத்திருந்த பிரதானமான குடுக்கையும் கடத்தைச்செய்தெடுத்துத்தீர்ந்தபின்புள்ள குலாலன்சக்கரத்திற்சுற்றும் கந்தர்வநகரமும் போலச் சீவன்முத்தரது வடிவமுந் தோற்றமாத்திரமாகப் பிரகாசிக்கும்,=எ-று, (௮௩)

மண்ணினிற்றடுக்கச்சலத்தினினனைக்க வருங்கனலிற்சுடவளியால் (ம்
நண்ணிநின்றசைக்கவெளியிடம்விடவே நணுகிடாதென்றுநின்றிலகு
புண்ணியசீவன்முத்தர்தம்வடிவம் பொற்புறவ்வடிவுகண்டளவே
விண்ணின்மண்ணினிற்பாதலத்தினிலுள்ளோர் வியப்பொடுமெழுந்
திறைஞ்சிடுவார்;

(இ-ள்.)=புண்ணியசொருபமாகிய சீவன்முத்தர்களது வடிவமானது மண்ணினிற்றடுக்கவும் சலத்தில்நனைக்கவும் பொருந்தியஅக்கினியிற்றகிக்கவும் காற்றினாற்சேர்ந்துநின்றசைக்கவும் வெளியானதுஇடம்விடவும் ஒன்றுந்தாக்காமல் சதோதயமாகப் பிரகாசிக்கும் அங்ஙனமானஅழகியவடிவத்தைக்கண்டமாத்திரத்தில் சொர்க்கமத்தியபாதாளங்களில் வசிக்கின்றவர்களும் ஆனந்தபரவசராயெழுந்து வணங்கிநின்று ஸ்தோத்திரம்பண்ணுவார்கள்,=எ-று. (௮௪)

மூன்றுநற்சுடரினினனையொப்பவராய்மூன்றுகாலமுமுணர்ந்தவராய்
மூன்றுலகத்துமுவமையில்லவராய் மூன்றுலகும்மறிந்தவராய்
மூன்றுநற்காண்டமுந்தெரிந்தவராய் மூன்றுசிற்பதமுமுற்றவராய்
மூன்றுமுன்மலமுமொருங்கறுப்பவராய்மூன்றுதாபமுமகன்றவராய்

(இ-ள்,)=மூன்றுசுடர்களிற் சூரியனுக்குச்சமானமானவர்களாய்த்திரிகாலமுந்தெரிந்தவர்களாய் திரிலோகங்களிலும் உவமையில்லாதவர்களாய் திரிலோகங்களுந்தெரிந்தவர்களாய் மூன்றுகாண்டங்களு மறிந்தவர்களாய் மூன்றாகிய ஞானபதங்களுமடைந்தவர்களாய் அனாதியாயுள்ள மும்மலங்களையும் அடியோடொழிப்பவர்களாய் மூன்றுதாபமும் நீங்கினவர்களாகி,=எ-று. (௮௫)

அகவிருண்மாயைகருமமிம்மூன்று மகற்றியேசுத்தங்கமாக்கித்
தகவிறுந்திடுநல்லைகயதாமப்பாற றன்னுயிராகியேதிகழும்

சுகசிவவுதயமாக்குதலியாஞ் சொற்றிடுதீக்கையினருத்தம்
ஜெகமிதிலவைவிற்பாவனைகடக்கச் செய்தங்குநிறுத்தவல்லவராய்,

(இ-ள்,)=ஆணவம் மாயைகன்மமாகிய இந்தமும்மலங்களையுமொழித்துச் சுத்ததேகமாக்கித் தகுதியாகநிறுத்துதல்கையாகும் அப்பால்தனதுருவமாகப்பிரகாசிக்கும் சிவானந்தோதயமாக்குவித்தல் தியாகும் சொல்லுகின்றதீக்கையினருத்தம் இதுவேயாகும் இந்தத்தேகாதிபிரபஞ்சத்திலுள்ள பாவனைகளையொழித்துப் பாவனாதீதத்தில்நிறுத்தவல்ல சாமர்த்தியமுடையவராகி,=எ-று. (அசு)

பிரணவவமுதேபுசித்தனுதினமும் பிரணவமயமதேயாகி
மரணமதுறுமிம்மனிதரைப்போல வடிவமாத்திரமதேதோன்றிப் (ச்
புரணநல்லொளிக்குமாயைக்குநடுவே புகுந்திருந்திலங்குநற்குருவை
சரணமாவடைந்தங்கவனருளாலே தரிக்கப்பெற்றங்கத்திலிங்கம்

(இ-ள்,)=சதாகாலமும் பிரணவாமிர்தத்தைப் புசித்துப் பிரணவசொரூபமாகி மரணத்தையடையும் இந்தமனிதர்களைப்போல உருவமாத்திரந்தோற்றப்பட்டுப்பூரணமாகிய அருட்பிரகாசத்துக்கும் மருளுக்கும் நடுவிற்புகுந்திருந்துபிரகாசிக்கின்ற சற்குருவைக்கண்டு சரணமடைந்து அவனது திருவருட் பிரசாதத்தினால் சரீரத்தி லிலிங்கதாரணந் தரிக்கப்பெற்று,=எ-று. சரீரத்தில் சிவம்பிரகாசிக்கப்பெற்று எனக்கொள்க. (அஎ)

தேகமும்பொறியுங்கரணமுமுயிருந் திரிவுறுமாயையின்மயத்தை
ஏகின்றகற்றித்தீக்கையிலாசானிலைக்கநிட்டானமந்திரமே
ஆகின்றமைத்தவகைதருவருளா லறிந்ததிற்பாவனையிடமாய்
உனகமதுடனே முன்னினைவகற்றி யுளத்தினிற்சகசமேபிறந்து.

(இ-ள்,)=சரீரமும்-இந்திரியமும்-அந்தக்கரணமுஞ் சீவனுமாகமாறுபடுகின்றமருள்மயமாகிய வடிவத்தை யடியோடுகெடுத்துநின்று ஆசிரியர் தீட்சைசெய்தகாலத்தில் இவற்றிற் கதிஷ்டானமாகிய பிரணவவடிவமாகும்படி அனுக்கிரகித்தவகையே குருகிருபையாலுணர்ந்து யுக்தியாக வதனிடத்திற் றிடபாவம்பெற்று முன்னிருந்தவாதனைகளைநீக்கி இருதயத்திற்சகசஞானமுண்டாகி,=எ-று, (அஅ)

இக்குலந்தனைக்கிச்சமயமதென் றிங்கியம்புதலிலையதனாலே
இக்குலந்தனைவிட்டிச்சமயத்து மெய்துதலியாயமதாகும்
இக்குலமத்திலெச்சமயத்து மிலங்கிடுஞானமுண்டதனால்
இக்குலமத்திலெச்சமயத்து மியற்கையைவிட்டிடலாகா,

(இ-ள்,)=இவ்வுலகத்தின்கண் இந்தக் குலத்துக்கு இந்தச்சமயமென்று சொல்லுமேற்பாடில்லை ஆகையால் இந்தக்குலத்தைவிட்டெந்தச்சமயத்திலும்பொருந்துதல்நியாயமாகும். இவ்வுலகத்தின்கண்எந்தச்சமயத்திலும்பிரகாசிக்கின்றஞானநிலைமையுண்டு. இவ்வுலகத்தின்கண் எந்தச்சமயத்திருந்தபோதிலும் அந்தச் சமயவியற்கையை விட்டுவிடப்படாது,=எ-று, (௮௯)

அன்னியகந்தங்கவருதலகற்றி யன்னியரசனையுமகற்றி
அன்னியருபநோக்குதலகற்றி யன்னியபரிசமும்மகற்றி
அன்னியசத்தங்கேட்குதலகற்றி யன்னியநினைவதுமகற்றி
அன்னியருடனேயிணங்குதலகற்றி யன்னியருறைவிடமகற்றி.

(இ-ள்,)=அன்னியமாகிய கந்தத்தைக்கிரகிப்பதும் அன்னியமாகிய ரசத்தையும் அன்னியமாகியஉருவத்தைப்பார்த்தலும் அன்னியமாகிய பரிசத்தையும் அன்னியமாகிய சத்தத்தைக் கேட்பதும் அன்னியமாகிய நினைவையும் அன்னியரோடுசகவாசஞ்செய்வதும் அன்னியர் வசிக்குமிடத்தையும் நீக்கி,=எ-று, (௯௰)

அன்னியர்கையில்வாங்குதலகற்றி யன்னியர்க்கீகுதலகற்றி
அன்னியகடவுள்வணங்குதலகற்றி யன்னியகிரியையுமகற்றி
அன்னியநூலையோதுதலகற்றி யன்னியகேள்வியுமகற்றி
அன்னியபாகமருந்துதலகற்றி யன்னியவகையறத்துடங்கி,

(இ-ள்,)=அன்னியர்கையில்வாங்குவதும் அன்னியருக்குக் கொடுப்பதும் அன்னியதேவரை வணங்குவதும் அன்னியமாகியகிரியைகளும் அன்னியசாஸ்திரங்களை வாசித்தலும் அன்னியமாகிய கேள்வியும் அன்னியபாகத்தைப்புசித்தலும் ஆகிய அன்னியவகைமுழுவதும் அடியோடு நீக்கத்தொடங்கி,=எ-று, (௯௧)

சமயநற்கிரியையனைத்தையும்விடினுந் தனக்கந்தப்பிரணவவமுதம்
அமையநின்றூறியதனையேயருந்தி யவ்வடிவாயிடுமளவும்
சமயிகள்பாகமதனையேகொண்டு தற்பரநிவேதியம்புரியும்
அமைதியைவிட்டான்மேற்கொளாதென்ப தறிந்ததைநியமமாக்கொ
(ள்ளும்.

(இ-ள்.)=சமயாசாரமுதலிய எல்லா வற்றையும் விட்டபோதிலும் அந்தப்பிரணவாமிர்தந் தனக்குக்கிடைத்துநின்று சுரந்து அவ்வமிர்தத்தையே புசித்து அந்தவடிவமாகிறபரியந்தமும் சமயிகள்பாகத்தையேபுசித்து ஈஸ்வரநிவேதனஞ்செய்யும் முறைமையைவிட்டால் அவ்வனுபவம் மேலிடாதென்பதறிந்து அதைநியமமாகவேசெய்வன்,=எ

புரிசடையோனுக் கற்பித்துக்கொளினும் பொருந்தியபொருளதே
வேண்டும், திரிவின்றியொன்றாய்ப் பாவித்துக்கொளினுஞ் செல்லல்
போலொழுங்கதேவேண்டும், அரியநல்லறத்தைவேண்டிடிற்பொரு
ளு மறமதாயீட்டவேண்டிடும்போல், உரியதற்சமயத் தொழுங்கினி
ற்புசித்தா லுளத்தழுக்கின்றியேவதியும்,

(இ-ள்,)=கற்றையாகிய சடாபாரத்தையுடைய பரமசிவனுக் கற்பித்துப் புசித்தபோதினும் அதற்குத்தகுந்தபொருள்வேண்டும் மாறுதலில்லாமல் ஏகமாய்ப்பாவித்துப் புசித்தபோதினும் நடக்கைபோலப் பாவனையும்வேண்டும். அரிதாகியநல்ல தருமத்தைவிரும்புமிடத்துத் திரவியமுந் தருமமாகவே சம்பாதிக்கவேண்டுவதுபோல உரித்தாகிய தற்சமயவொழுங்கினிற் புசித்தால் இருதயத்தில் களங்கமில்லாமற்பொருந்தியிருப்பன்,=எ-று. (௯௫)

ஞானசங்கமத்துக்கிந்நெறியதனி னவிற்றிடுஞ்சாதியுஞ்சமயத்
தினமிலாசாரமும்விசாரித்த லியற்கையேயன்றெவரேனும்
ஊனமிலங்கந்தனிலிங்கமொன்றே யுளபிரமாணமாய்க்கொண்டங்
கானநற்பயிக்கமவர்மனைதோறு மங்கையேற்றருந்திடலாமால்,

(இ-ள்,)=ஞானசொரூபமாகிய சங்கமர்களுக்கு இந்த மார்க்கத்தில் சொல்லுகின்ற சாதியாசாரமும் இழிவில்லாத சமயாசாரமும் விசாரிக்குதலியற்கையல்ல,எவர்களாயிருந்தபோதினும் ஊனமில்லாத அங்கத்திற்பிரகாசிக்கும்இலிங்கமொன்றையே உண்டாகியபிரமாணமாகக்கொண்டு அவ்விடத்திற்கிடைக்கும் பிட்சையை அவர்கள்வீடுதோறும் கையேற்றுப்புசிக்கலாகும்,=எ-று, (௯௬)

சடுத்தலமதினுமிலிங்கமேயாகித் தானெனல்விடுத்தருந்தியபின்
கொடுத்தவன்றனுக்கொடுத்திடுபொருளுங் கொள்ளுவோன் றனு
அடுத்தவிம்மாயாவடிவதைநோக்கியகற்றியவ்வோமயமாக(மொன்றாக
விடுத்தனுதினமும்புசித்திடிலனைத்தும் விமலவோமயமதாய்விடுமே

(இ-ள்,)=சடுத்தலத்திலும்இலிங்கமயமேயாகித்தானென்பதைவிட்டுப்புசித்தபின்பு கொடுத்தவனும் கொடுக்கும் பொருளும்கொள்ளுகின்றவனும் ஏகரூபமாகக்கண்டு நேர்ந்துள்ள இந்தமருள்வடிவத்தைப் பார்த்துநீக்கி அந்தப் பிரணவவடிவமாகக்களைத்துச் சதாகாலமும் புசித்துவந்தால் சகலமும் பரிசுத்தமாகிய பிரணவமயமாகிப்போம்-எ-

இன்னதன்மையவாஞ்சுத்தபாவனையி லிரும்பிராரத்தம்போமொளித்
தன்னதுணின்றிங்கிடைவிடாதூறுந் தக்கதோர்பிரணவமுதம்(துத்
அன்னதையருந்திமுன்வடிவதுவு மங்ஙனமோமயமாகி
இந்நிலைதனிற்றோற்றன்மாத்திரமா யியங்குதல்சீவன்முத்தியதே,

(இ-ள்,)=இத்தன்மையாகிய சுத்தபாவனையினால் விடப்படாததாகிய பிராரத்தகன்மம்போய்விடும் அவனது இருதயத்திலிருந்து தகுதியாகிய ஒப்பற்ற பிரணவாமிர்தமானது இடைவிடாமற்சுரக்கும் அவ்வகையான அமிர்தத்தைப்புசித்து மருள்வடிவமும் அந்த வகையாகவே பிரணவமயமாகி இந்தவுலகத்தினிடத்துத் தோற்றமாத்திரமாய்ச்சஞ்சரிப்பது சீவன்முத்தியாகும்;=எ-று, (௯௬)

அறிவிலாக்குழந்தைப்பருவத்தின் முலைப்பாலருந்திடுக்குமாரங்காளையினில், அறிவிலாக்குழந்தையருந்துதல்கண்டு மதினைசைசகசமாயிலதின், அறிவிலாச்சீவத்துவப்பருவத்தினருந்திடுமாயையினுணவை, அறிவிலாச்சீவரருந்துதல்கண்டு மதினைசைசகசமாயின்றாம்.

(இ-ள்,)=அறிவில்லாதகுழந்தையானது அந்தக்குழந்தைப்பருவத்தில் ஸ்தனமிர்தத்தைப்புசிக்கும், குமாரப்பருவத்திலுங் காளைப் பருவத்திலும் அந்த அறிவிலாதகுழந்தைகளானது புசிக்கக்கண்டும் அதனிடத்திற் சகசமாய் விருப்பமில்லாததுபோல அறிவில்லாத சீவத்துவப்பருவத்திற் புசிக்கு மருட்புசிப்பை அறிவில்லாத சீவர்கள் புசிப்பதுகண்டும் அதனிடத்திற் சகசமாய் விருப்பமில்லையாம்,=எ-று;()

அனமதும்பாலுஞ்சருக்கரைகண்டு மங்கனிவகைகளுந்தேனும்
இனமவையொன்றாய்க்கூட்டியருசியி னிதயநின்றிடைவிடாதூறுங்
கனபிரணவவமுதத்தையேயருந்திக் களிப்பவர்மீட்டுமிச்சகத்தின்
பினமுறுவிடயவின்பையெண்ணிடுமோபிராரத்தமும்மிலையவர்க்கே.

(இ-ள்,)=அன்னமும்பாலுஞ் சருக்கரையும் கற்கண்டும் அழகியமுப்பழவகைகளும் தேனும்ஆகிய இவைகளை ஒன்றாய்க்கலந்த சுவையிலும் அதிகமாக இருதயத்திலிருந்து இடைவிடாமற்சுரக்கின்ற மேன்மையாகிய பிரணவாமிர்தத்தையேபுசித்து ஆனந்திப்பவர்கள் திரும்பவும் இந்த வுலகத்தில் நாசப்படுகின்ற விஷயசுகத்தை நினைப்பார்களோ அவர்களுக்குப் பிராரத்தகன்மமுமில்லை.=எ-று, (௯௮)

உபயநல்லமுதேபுசித்தனுதினமு முபயமேவடிவதாகி
அபயமென்றரைக்குமுயிர்களுக்கிரங்கி யஞ்சலென்றவர்களை நோக்கி
உபயவந்நெறியின்பயனைமுன்னுணர்த்தியுபதேசஞ்செய்திநின்றாரைக்கு
அபயமற்றொன்றுமிலாதவிந்நெறியே யனுக்கிரகம்புரிந்திடுமால் (௯

(இ-ள்,)=சார்வதா பிரணவாமிர்தத்தையே புசித்து பிரணவசொரூபியாயிருந்து அபயமென்று சரணமடைகின்ற சீவர்களுக்கிரங்கிப் பயப்படாதேயென்று அவர்களைப்பார்த்து உபயமாகிய ஆகமசித்தாந்த வேதசித்தாந்தமார்க்கங்களைப் பிரதமத்தில் தெரிவித்தும் பின்பு

உபநிடதத்திற் கூறப்படுகின்ற ஒருபயமுமில்லாதஇந்தச்சிவாத்துவிதமாகிய அசிபதமார்க்கத்தையே அனுக்கிரகஞ்செய்யும்,=எ-று. ()

இந்நிலைசின்னாட்சீவர்கணிமித்த மிருந்தனுக்கிரகமேபுரிந்தும்
அந்நிலையதனினின்றருளமுதந் தான்புசித்தருண்மயமாகி
அந்நிலைபரமமுத்தியிற்சிவத்துக் கங்கமாய்நிகழுமுன்போலென்
றிந்நிலைசாமத்தசிபதமுரைக்கு மிதுசிவாத்துவிதமென்றுணர்வாய்

(இ-ள்,)=சீவர்கள்நிமித்தம் இந்தநிலையாகச் சிறிதுநாளிருந் தனுக்கிரகஞ்செய்துந் தமது பிரணவநிலையிலிருந்தே அருளமிர்தத்தைப்புசித்து அருண்மயமேயாகி அந்தநிலையாகிய பரமுத்தியில் சிவத்துக்கங்கமாய் முன்போலப்பிரகாசிக்குமென்று இந்தச் சிவாத்துவித நிலையில் சாமவேதமகாவாக்கியத்தின்கண்ணுள்ள அசிபதார்த்தஞ் சொல்லும் இதுவே சிவாத்துவிதமாகுமென் றறிவாயாக,=எ-று, (௱)

என்றெனையாண்டவிருத்தவம்பிகையே யிதயத்தும்விளக்கிவாக்குள்ளும், நின் றுரைத்திந்தநெறிசொலுமருத்த நினக்கும்வாய்த்திடுமென்றுவாழ்த்திச், சென்றெனதுடலுங்காணமுஞ்செகமுஞ்சேர்ந்திடும் போகமுந்தானாய், நின்றனள்கண்டே னிதற்குக்கைம்மாறென் னிருமலைவாழிநீடூழி,

(இ-ள். =இவ்வகையென்று என்னையடிமைகொண்டருளிய விருத்தாம்பிகைத்தாயானவள் எனது இருதயத்திலும்விளங்கச்செய்துவாக்கிலுமிருந்து இந்நூலைச்சொல்லிமுடித்து இந்தமார்க்கத்திற் கூறப்படும் அனுபவம் உனக்குஞ்சித்திக்குமென்று வாழ்த்துகூறிப்போய் எனது தனுகரணபுவனபோகமாகிய நான்கும் தற்சொரூபமாகவே பூரணமாய்ப் பிரகாசித்து நின்றனள். நானும் பூரணமாகவே தெரிசித்தேன், இதற்குப் பிரதியுபகாரம் என்னசெய்யப் போகிறேன். அந்த நிருமலையாகிய பெரியநாயகி யம்மையார் நீடூழி காலமும் வாழக்கடவது=எ-று, (௱௧)

சுத்தசாதகம் - முற்றிற்று.

